ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம::

ஸ்ரீ தொண்டரடிப்பொடி ஆழ்வார் அருளிய

# திருமாலை

## (வாழும் சோம்பர் விரும்பும் திருமால்)



ஸ்ரீ தொண்டரடிப்பொடியாழ்வார்

முனைவர் டி.எஸ். ராமஸ்வாமி

ஸ்ரீ:

ஸ்ரீமதே இராமானுஜாய நம:

ஸ்ரீ தொண்டரடிப்பொடி ஆழ்வார் அருளிய

# திருமாலை

(வாழும் சோம்பர் விரும்பும் திருமால்)

முனைவர் **டி.எஸ். ராமஸ்வாமி**

# முன்னுரை

திருவல்லிக்கேணி திவ்யப்பிரபந்த கோஷ்டி (அருளிச்செயல் கோஷ்டி) உலகப்பிரசித்தம்; ஈடு இணையற்றது. பெருமாளுடன், ஆழ்வார், ஆசாரியர்கள் வீதிவலம் எழுந்தருளும்போது, முன்னால் திவ்யப்பிரபந்த கோஷ்டியும், பின்னால் வேதபாராயண கோஷ்டியும், நடுவில் எழுந்தருளும் மூர்த்தியின் அற்புதமான திருமேனி அழகு, அழகுக்கு அழகு சேர்க்கும் அலங்கார நேர்த்தி எல்லாமே காணக் கண்கொள்ளாக் காட்சி! கேட்க கேட்க ஸ்ரீவல்லபர் அருளியதுபோல் ''மதுரம் மதுரம்'' தேனினும் இனிய செந்தமிழ் பக்திப் பாசுரங்கள், கம்பீர வடமொழி ஓசைகள் செவிக்குத் தெவிட்டாத விருந்து!

எங்கும் பக்தி உணர்வில் மக்கள் கூட்டம்! எல்லோரும் மனம் ஒன்றி, மயங்கிக் கிடக்கும் நிலை! பிரியாவிடை கொடுக்கும்போது, மீண்டும் எப்போதோ என்று ஏக்கம்! சில ஆண்டுகளுக்கு முன்னர், ஒரு நாள் வீதி வலத்தின்போது, அடியேன் நிறைந்த நெஞ்சுடன் வணங்கி எழுந்ததும், அருகில் அன்றுதான் வந்திருந்த நண்பர், காதில் நாராசமாக சுடு சொற்கள் சில உதிர்த்தார்.

''என்ன இதெல்லாம்? எதற்காக இத்தனைபேர் பெருமாளுக்கு முன்னும், பின்னும் ஏதோ சத்தம் போட்டுக்கொண்டு போகிறார்கள்? இவர்களெல்லாம் எங்காவது நிலத்திலோ, தொழிற்சாலையிலோ வேலை செய்தால் வீடும், நாடும் உருப்படும். சோம்பேறிகள் சோம்பேறிகள்'' என்று என்னவெல்லாமோ பிதற்றினார்.

உடனே, அடியேன் அவரை இல்லத்திற்கு அழைத்துச்சென்று, அமரவைத்து கோவில் பிரசாதங்கள் கொடுத்து, பின்னர் அவருடன் பேசினேன். ''அடியேனுக்கு நாத்திக நண்பர்கள் நிறைய உண்டு. அவர்களிடம் வாதம் செய்து ஒரளவுக்குத் திருத்தியுள்ளேன். ஆனால் உன்னைப்போல் ஸ்ரீவைஷ்ணவ உறவினர்கள், நண்பர்களைத் திருத்துவது மகாசிரமம். ஆத்திக நாத்திகர்களை ஒரு நாளும்

திருத்தமுடியாது. இருப்பினும் சொல்கிறேன், கேள்: உலகம் முழுவதும் ஒப்புக்கொள்ளப்பட்ட விஞ்ஞான உண்மை என்ன தெரியுமா? மனிதனின் இலக்கு, பணம் அல்ல: வேறு எதுவும் இல்லை: அலை பாயும் மனதின் பாரத்தை இறக்கி, ஒரே சீராக அமைதியாக வைத்துக் கொள்வதுதான். Relaxed mind is the key for happiness. அத்தகைய தெளிவு வேண்டுமானால் ஒரே வழி வாழும் சோம்பராக இருப்பதுதான்''. ''சோம்பர் புரிகிறது. அதென்ன வாழும் சோம்பர்?'' என்று அவர் கேட்டார். பின்னர் அடியேன் ''திருமாலை'' 38ஆம் பாசுரமான ''மேம்பொருள் போகவிட்டு'' எனும் பாசுரத்தின் கருத்தை அவருக்கு விளக்கிச் சொன்னேன். கோஷ்டியினர் வாழும் சோம்பராக வாழ முயற்சிப்பவர்கள் எனக் கூறினேன். சிறிதளவு சாந்தி அடைந்தார். அடியேனின் விளக்கத்தைக் கேட்டதாலோ, கோவில் பிரசாதம் சாப்பிட்டதாலோ, அவர் திருந்தியதைப்போல் அடியேனுக்குத் தோன்றியது. ஆகவே, திருமாலை சாரம் எழுதத் துணிந்தேன்.

''திருமாலை'' என்கிற கிரந்தத்தைக் கற்றுத் தேறாதவர்கள், ''திருமால்'' எனும் எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணனை முழுமையாக அறியமுடியாது ஆகவேதான், ''திருமாலை'' அறியாதார் 'திருமாலை' அறியார் என்பர்.

திரு + மாலை = திருமாலை அல்லது திருமால் + 9 = திருமாலை, அதாவது பரமாத்மா + ஜீவாத்மா என்றும் சொல்லலாமே! உலகில் பெரும்பான்மையோர் எம்பெருமானின் லீலைக்கு விஷயமாகின்றனர். சிலர், ஆழ்வார்கள் போன்றோர், அவன் கிருபைக்குப் பாத்திரமாகின்றனர். ஆகவே, அந்தப்பலர் உய்யும் பாசுரங்கள் சிலரால் மலர்ந்தன.

ஸ்ரீ சௌநக பகவான் எனும் ரிஷி அருளிய விஷ்ணு தர்மம் திருநாம சங்கீர்த்தனமே கலிகாலத்தில் சம்சாரிகள் உய்ய ஏற்றது என்பதைத் தெரிவிக்கிறது. ஸ்ரீ தொண்டரடிப்பொடி ஆழ்வார் அருளிய திருமாலை மிக வலிமையாக, எளிமையாக, இனிமையாக திருநாம சங்கீர்த்தனத்தின் மேன்மையை விளக்குகிறது. அதுமட்டுமா? திருமாலையில் உயிரான 38வது பாசுரம் ''மேம்பொருள் போகவிட்டு'' என்பதே. நம் எல்லோருக்கும் எம்பெருமானைப் பிடிக்கும், அவனை விரும்புகிறோம் என்பது தெரியும். ஆனால், நம்மில் யாரை எம்பெருமான் விரும்புகிறான்? எப்படிக் கண்டுபிடிப்பது?

38-ஆம் பாசுரத்தை ஊன்றிப்படித்து, நன்றாகக் கற்றறிந்துகொண்டால், அவன் யாரை மிகவும் விரும்புகிறான் என்பது தெரியும். பின்னர், அந்தப் பாசுரத்தில் அருளப்பட்ட ஆறு விஷயங்களையும் கிரகித்துக்கொள்பவர்களுக்கு, அதன்படி நடைமுறையில் வாழவேண்டும் என்ற அவா பிறந்தாலே போதுமானது. 'திருமாலை'யில் எல்லாப் பாசுரங்களுமே உலக வாழ்வில் மூழ்கிக் கிடக்கும் சம்சாரிகளுக்காகவே அருளப் பட்டதாயினும், மூன்று விதமான உரையாடல்களைக் காணலாம்:-

1) **ஆழ்வார் அரங்கனுடன் உரையாடல்**
2) **ஆழ்வார் சம்சாரியுடன் உரையாடல்**
3) **ஆழ்வார் தன் நெஞ்சுடன் உரையாடல்**

பாசுரங்களின் உட்கருத்துக்களைப் புரிந்துகொண்டு அனுபவிக்க வேண்டும். அப்போதுதான் 'திருமாலை' உயர்வு புரியும்.

அடியேனுக்கு உறு துணையாக இருந்தவை:- சுதர்ஸனம் **ஸ்ரீ கிருஷ்ணசாமி ஐயங்காரின் 'திருமாலை', டாக்டர் M.A. வேங்கடகிருஷ்ணன்** வகுப்பில் எடுத்த பாடக்குறிப்புகள், அத்துடன் மிகச்சிறிய அளவு வாழ்க்கை அனுபவங்கள். ஆகவே,

ஸ்ரீ சுதர்ஸனம் ஸ்வாமிக்கும், ஸ்ரீ வேங்கடகிருஷ்ணன் ஸ்வாமிக்கும் நன்றி. அத்துடன், டைப்பிஸ்ட் குவளை ஸ்ரீ T.M. ராஜகோபாலனுக்கும், உதவிய அடியேன் மனைவி ஸ்ரீமதி லட்சுமி இராமசாமிக்கும் நன்றி. வழக்கம்போல் நன்றாக அச்சிட்டு உதவிய RNR பிரிண்டர்ஸ். திரு ராஜன் அவர்களுக்கும் நன்றி. மிக முக்கியமாக, அடியேனின் நெருங்கிய நண்பர், அமரர் ஸ்ரீ எஸ். கிருஷ்ணராம் தவே மூத்த வழக்கறிஞர், இந்த நூல் வெளிவர ஊக்கப்படுத்தி உதவிய அவரை மறக்கவே முடியாது.

மிகவும் சுருக்கமாக, பதவுரை, பொழிப்புரை இல்லாமல், கருத்து மட்டும் எழுதியுள்ளேன். பயன் அளிக்கும் என உறுதியாக நம்புகிறேன். குற்றம் குறைகளைப் பொறுத்துக்கொள்ளுமாறு வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன்.



ஸ்ரீ:



ஸ்ரீமதே இராமானுஜாய நம:

ஸ்ரீ தொண்டரடிப்பொடி ஆழ்வார் அருளிய

# திருமாலை

(வாழும் சோம்பர் விரும்பும் திருமால்)

**1. தனியன் : "மற்றொன்றும் வேண்டாமனமே மதிளரங்கர்**
**கற்றினம்மேய்த்த கழலிணைக்கீழ் - உற்ற**
**திருமாலைபாடுஞ்சீர்த் தொண்டரடிப்பொடியெம்**
**பெருமானை யெப்பொழுதும் பேசு."**

– திருவரங்கப் பெருமாளரையர்

(ஸ்ரீ ஆளவந்தார் திருக்குமாரர், இராமானுஜரின் ஐந்து ஆசார்யர்களில் ஒருவர்)

மனமே மனிதர்களுக்கு ஸம்சார பந்தத்திற்கும், ஸம்சாரத்திலிருந்து விடுபடுவதற்கும் காரணமாகிறது

(விஷ்ணுபுராணம்)

தொண்டர்க்கு தொண்டராயிருப்பதால், ஆழ்வார் நமக்கு ஸ்வாமி, ஆசார்யன். அவர் திருநாமத்தையே எப்போதும் ஜபிக்கவேண்டும்.

## அவதாரிகை (உதயம்) :

திருமால் எனப்படும் ஸ்ரீமந்நாராயணனே பரதெய்வம்; அவனே எம்பெருமான். அவனையே பேரின்பமாக அனுபவித்து, அவனுக்குத்தொண்டு செய்யும் உரிமை, கடமை சம்சாரிகளான நம் அனைவருக்குமே உண்டு; அனந்தன் (ஆதிசேஷன்), கருடாழ்வான் போன்ற, எம்பெருமானைவிட்டுப் பிரியாமல் எப்போதும் இருக்கும்

நித்யசூரிகளுக்குக் கிடைக்கும் இனிய அனுபவம் நமக்கும் கிடைக்கவேண்டும். அப்படியிருக்க, இதை அறியாமல், ''தேகமும் ஆத்மாவும் ஒன்றே, தேகத்தின் ஐந்து இந்திரியங்கள் மூலம் கிடைக்கும் இன்பமே இன்பம், வேறு இன்பம் கிடையாது'' என்று எண்ணி, அதையே விரும்பி, ஸம்சாரத்தின் சிற்றின்பங்களில் திளைத்திருந்த விப்ர நாராயணருக்கு (தொண்டரடிப் பொடியாழ்வாருக்கு) எம்பெருமான் அருள் கிடைத்தது. அவன் ஆழ்வாருக்குத் தன் சொரூபம், ரூபம், குணங்கள், செல்வங்கள், ஆகியவைகளை விளக்கிச் சொல்லக்கூடிய தன் திருநாமங்களின் பெருமையை ''நிர்ஹேதுகமாக'' (ஆழ்வாரிடம் எதையும் எதிர்பார்க்காமல்) காட்டியருள, ஆழ்வார் அதைத்தாமும் கண்டு, அனுபவித்து, அனுபவிக்க விரும்பும் மற்றவர்களையும் அனுபவிக்கச்செய்ய வல்லவராய், பெரியபெருமாளையும் உகப்பித்து, இப்பிரபந்தத்தை நமக்காகவே அருளிச் செய்கிறார். எல்லோரும் அறியவேண்டிய எல்லா அர்த்தங்களும் இந்தப்பிரபந்தத்தில் அடங்கியிருப்பதாக வியாக்கியான சக்கிரவர்த்தியான பெரியவாச்சான்பிள்ளை உலகுக்கு அறிவித்திருக்கிறார்.

''திருமாலை அறியாதார் திருமாலை அறியாதாரே'' என்பது ப்ரசித்தம்.

எம்பெருமானின் திருநாமத்தின் சிறப்பும், திருநாம சங்கீர்த்தனம் செய்பவர்களின் பெருமையும், இந்திரலோகம் ஆளும் அந்தச்சுவையைக் காட்டிலும், திருநாமம் சொல்வதின் சுவையே உயர்ந்தது என்ற தெளிந்த ஞானமும், இந்தப் பிரபந்தத்திலே விளக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றது. அச்சுதன் பெயரைச் சொல்ல அனைவர்க்கும் தகுதி உண்டு என்பதே ஸாரம்.

**காவலிற்புலனைவைத்துக் கலிதன்னைகடக்கப்பாய்ந்து***
**நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர்தலைகள்மீதே***
**மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ! நின்நாமம்கற்ற***
**ஆவலிப்புடைமைகண்டாய் அரங்கமாநகருளானே.**

**(திருமாலை – 1)**

## நின்நாமம் கற்ற கர்வம்

திருவரங்கா! எல்லா உலகங்களையும் பிரளய காலத்தில் உண்டு, திருவயிற்றில் வைத்துக்காத்து, பின்னர் அவைகளை வெளிப் படுத்தியவனே!

படைப்புகளுக்கு மூலகாரணமான முதல்வனே! தேவாதிதேவா! உலக நன்மைக்காகவே திருவரங்கத்திலே யோகநித்திரையில் ஆழ்ந்துள்ள எம்பெருமானே!

கட்டுக்கடங்காமல் அலைந்து திரிந்த என் ஐந்து புலன்களின் ஆட்சியைக் கட்டுப்படுத்தினேன்; பாபக்கூட்டங்களையெல்லாம் நசித்தேன்; என்னை நெருங்கிய எமன், அவன் தூதர்கள் எல்லோர் தலைமீதும் வெற்றிக்கூச்சலுடன் நடனமாடினேன்.

அச்சம் என்பது என்னிடமிருந்து அடியோடு அகன்றது. இவ்வளவு பலன்களும் எனக்கு எப்படிக்கிடைத்தன?

''ஓம் நமோ நாராயணாய'' என்னும் உன் திருநாம திருமந்திரத்தை முறைப்படி கற்று, உன்னையே இடைவிடாமல் மனதிலே சிந்தித்து, உன் திருநாமங்களையே வாயினால் பாடி, உன்னையே பக்தியுடன் பூசித்து வந்ததினால், அலைபாய்ந்த அடியேன் உள்ளம் சீரடைந்து, பேரின்பம் பெற்று, அமைதி எனும் பெருமகிழ்ச்சி அடைந்தது.

திருவரங்கா! உன் திருப்பெயரைக்கற்று, திருப்பித்திருப்பிச் சொன்னதால் புலன்கள் அடங்கி, எமபயம் நீங்கி, வெற்றிக்கூத்தாடின என் செருக்கைக்கண்டாயா? என்னே உன் திருநாமப்பெருமை!

காலமிருந்தாலும் என்ன பிரயோஜனம்? பாதி உறக்கத்தில் போய்விடுகின்றது ஒரு காணி பயிரில் பூச்சிக்கடியில் பாதி வீணாகிவிடுவதுபோல மீதியுள்ள ஆயுளில் பதினைந்து ஆண்டுகள் அறியாக் குழந்தை, பாலப்பருவங்களில் போய்விடுகின்றது. அடுத்த பதினைந்து ஆண்டுகள் மண்டித்திரியும் வாலிபப்பருவம் ஏதேதோ விஷயங்களை நாடிச்செல்கிறது. பிறகு, எல்லா இந்திரியங்களும், ''ஐவர் அறுத்துத்தின்றிட அஞ்சி நின்னையடைந்தேன்'' என்பதுபோல, தம்தமக்குரிய விஷயங்களை அனுபவிக்க ஆசைப்பட்டுத்திரிகின்றன. ஆகவே, 'பிணி' பற்றிய வயதான காலத்தில் விஷயங்களை அனுபவிக்கத் தகுதியில்லாதபோதும், அவற்றை அனுபவிக்கவேண்டும் என்ற ஆசை தொடர்ந்து வருகின்றதே!

''பண்டு காமரானவாறும், பாவையர் வாயமுதம் உண்டவாறு, வாழ்ந்தவாறும், ஒக்க உரைத்து இருமி'' என்று, முன் அனுபவத்தைச் சொல்லியாவது உயிர் தரிப்போம் என்று நினைக்கும் கிழப்பருவம் கழிகின்றது. இப்படி கிழத்தனத்திலே தடுமாறி நிற்கும்போது, பெரும் துன்பமாகிற மரணம் முன்னறிவிப்பில்லாமல் இடிவிழுந்தாற்போல் வந்து விடுகிறதே!

ஆக, உறங்கிய பாதிகாலம் போக மீதி காலமெல்லாம் இப்படி வீணாகக்கழிகின்றதே! உன் திருநாமம் சொல்வதற்கே இடம் இல்லாதபடி ஆயுள் முழுதும் வேறு விஷயங்களில் செல்கிறது என்று உன்னிடம் கணக்கு காட்டுகிறேன் திருவரங்கா! ஆதலால் எனக்கு பிறவியே வேண்டாம்!

<u>பகவான்:</u> பரமபதம் வேண்டாம் என்று முன்பு சொன்னீர்! இப்பூலோகத்தில் சம்சார வாழ்வில் சுவையில்லை, பிறவி வேண்டாம் என்று இப்போது கூறுகிறீர்! உம்மை அனுப்ப வேறு இடம் எனக்குச் சொந்தம் இல்லையே!

**ஆழ்வார்:** பூலோகவைகுந்தமாகிய திருவரங்கம் உள்ளதே! அங்கு எந்தத் தடங்கலுமில்லாமல் உன் திருவடிகளில் எப்போதும் திருநாம ஸங்கீர்த்தனம் செய்யலாமே! சம்சாரக்குறைகளை நீக்கித் தன் திருவடிகளில் சேர்த்துக்கொள்ளும் திருவரங்கன் வாழும் திருவரங்க வாழ்வல்லவா அடியேன் வேண்டுவது?

**மொய்த்தவல்வினையுள்நின்று மூன்றெழுத்துடையபேரால்***
**கத்திரபந்துமன்றே பராங்கதிகண்டுகொண்டான்***
**இத்தனையடியரானார்க்கு இரங்கும்நம்மரங்கனாய***
**பித்தனைப்பெற்றுமந்தோ பிறவியுள்பிணங்குமாறே.** (4)

## ஸம்சாரிகளே! கேளுங்கள்! திருநாமம் பாபிகளுக்கும் மோட்சம் தரும்

''கோவிந்த'' என்ற மூன்றெழுத்துத் திருநாமம், 'கத்திரபந்து' என்ற மகாபாபியையும் திருத்தி இறைவன் திருவடிகளில் கொண்டு சேர்த்தது. கருணையே வடிவான திருவரங்கன், திருமால் அடியார்கள் எவ்வளவு பாவங்கள் செய்திருந்தாலும் அவர்கள் வருந்தி, மனம் திருந்தி ''கோவிந்தா'' என்னும் திருநாமத்தைத் தொடர்ந்து சங்கீர்த்தனம் செய்துவந்தால், திருவுள்ளம் இரங்கி, அவர்களை மன்னித்து, அங்கீகரித்து ஆட்கொள்வானே! ஐயோ! இதைக்கூட அறியாமல் நீங்கள் ஸம்சாரக்கடலில் மூழ்கி அவன் திருநாமம் சொல்லாமல் கிடக்கிறீர்களே! பாவம் செய்துவிட்டோமே என்று அஞ்சவேண்டாம்! ''கோவிந்தா'' என்ற கூக்குரலைக்கேட்டு அவன் ஓடோடி வந்து உங்களை ரட்சிப்பான்! இது திண்ணம்!

**பெண்டிரால் சுகங்களுய்ப்பான் பெரியதோரிடும்பைபூண்டு***
**உண்டிராக்கிடக்கும்போது உடலுக்கேகரைந்துநைந்து***
**தண்டுழாய்மாலைமார்பன் தமர்களாய்ப்பாடியாடி***
**தொண்டுபூண்டமுதமுண்ணாத் தொழும்பர்சோறுகக்குமாறே*** (5)

## சம்சாரிகளே! இப்படி உடலுக்கே கரைந்து நைந்து போகிறீர்களே!

படமெடுத்து ஆடும் விஷப்பாம்பின் நிழலில் யாராவது இளைப்பாறுவரோ? சிற்றின்ப வாழ்வு எனும் பாம்பின் நிழலில் அறியாமையால் கிடக்கிறீர்களே! தேக சுகத்துக்காகவே, ஓடி, ஆடி, உழைத்து, பலருக்குப் பல்லைக்காட்டி, களைத்துப்போகிறீர்களே! தேகமும், அதன் சுகத்துக்காகக்கிடைப்பவையும் அற்பமானவை, நிலையற்றவை என்பதை ஏன் புரிந்துகொள்ளவில்லை? தேகத்துள்ளிருக்கும் ஆத்மாவே நிலையானது. நிலையான ஆத்மா தூய்மை கெடாமல் எம்பெருமானை அடைந்துய்ய வேண்டாமா? தேகத்தைப் பேணிக்காக்கவேணும், தேகத்தை இயக்கும் ஆத்மாவையும் பேணவேணும். அதற்கு, திருநாம சங்கீர்த்தனமே வழி. ''அரங்கா, அரங்கா'' என்று எப்போதும் அவன் பெயர் சொல்லி உங்களைத் தகுதியாக்கிக் கொள்ளுங்கள்.

**மறஞ்சுவர்மதிளெடுத்து மறுமைக்கேவெறுமைபூண்டு***
**புறஞ்சுவரோட்டைமாடம் புரளும்போதறியமாட்டீர்***
**அறஞ்சுவராகிநின்ற அரங்கனார்க்காட்செய்யாதே***
**புறஞ்சுவர்கோலஞ்செய்து புள்கவ்வக்கிடக்கின்றீரே.** (6)

## சம்சாரிகளே, ஓட்டைவீட்டுக்கு அலங்காரமோ?

நிலையற்ற சரீரம் ஓர் ஓட்டை வீடு. அந்த ஓட்டை, ஒழுகல் வீட்டுக்கு அலங்காரம் தேவையா! உள்ளேயிருக்கும் ஆத்மா அரங்கனுக்குத் தொடர்ந்து தொண்டுசெய்ய வேண்டாமா? நினைவிருக்கட்டும், மரணம் உங்கள் பிடரியைப்பிடித்து நிற்கிறது. உயிர் வாழ்வதற்கும், மரணத்துக்கும் இடையே மிக மிக மெல்லிய இடைவெளிதான் உள்ளது. ''பிறகு பார்த்துக் கொள்ளலாம்'' என்று பகவத் சிந்தனையைத் தள்ளிப்போடாதீர்கள். எம்பெருமானின் திருநாமம் சொல்லாமலேயே திடீரென்று மரணம் நேர்ந்தால், கீழே விழும் உங்கள் உடலை, மாமிஸம் தின்னும் கழுகுகூடத் தீண்டாது.

ஆகவே, இதோ, இப்போதே. அரங்கனின் ஆயிரக்கணக்கான பெயர்களைச் சொல்ல ஆரம்பித்துவிடுங்கள். அது ஒன்றே நீங்கள் உய்ய வழி என்பதில் உறுதியாக இருங்கள்!

**புலையறமாகிநின்ற புத்தொடுசமணமெல்லாம்***
**கலையறக்கற்றமாந்தர் காண்பரோகேட்பரோதாம்***
**தலையறுப்புண்டும்சாகேன் சத்தியங்காண்மின் ஐயா!**
**சிலையினாலிலங்கைசெற்ற தேவனே தேவனாவான்.** (7)

**சம்சாரிகளே! இராமனே தேவாதிதேவன்:**

**சம்சாரி:** "ஆழ்வாரே! எங்களை ஏன் இகழ்கிறீர்? பகவத் சிந்தனைக்கும், நாம சங்கீர்த்தனத்துக்கும் எங்கே நேரம் கிடைக்கிறது? மனைவியிடம் சுகம் காண்பதும், குழந்தைகளைப் பெற்றெடுத்து அவர்களை வளர்த்து, படிக்கவைத்து, திருமணம் செய்வித்து, பின் பேரன், பேத்திகளைக் குலாவவே நேரம் சரியாக இருக்கின்றது. இது தானே உலக இயற்கை! உங்களுக்குத் தெரியாதா? எம்பெருமானை வணங்கத் தடைகள் உள்ளனவே! சரி, நேரம் கிடைத்தாலும், யாரை வணங்குவது? காட்டித்தருவீர்"

**ஆழ்வார்:** "சம்சாரிகளே! வேதங்கள், சாத்திரங்கள், இதிகாசங்கள், புராணங்கள் ஆகிய பிரமாணங்களின் கருத்தை நன்கு தெரிந்த அறிஞர்கள், ஒரு போதும், அவைகளைத் தங்கள் விதண்டாவாதங்களால் அழிக்க நினைக்கும் புற சமயத்தினரின் பேச்சைக்கேட்கவும் மாட்டார்கள்; அவர்கள் சொல்லும் விஷயங்களை நினைத்துப் பார்க்கவும் மாட்டார்கள். குற்றமற்ற வேதங்களைப் பிரமாணமாக ஏற்று, ஆனால் உறுதியில்லாமல் கிடக்கும் சம்சாரிகளே! இதோ இதைக்காணுங்கள்! என் உடலிலிருந்து தலையை வெட்டிச் சாய்த்தாலும் நான் சாகமாட்டேன், இது சத்தியம்!"

**சம்சாரி:** ஆழ்வாரே! நீர் செய்து காட்டவேண்டாம். உம் உறுதியை நம்புகிறோம்! வணங்கத்தக்க பரம்பொருள் யார் என்பதைச் சொல்லும்!

**ஆழ்வார்:** அவதார புருஷனாக இப்பூலோகத்தில் அவதரித்த சக்கரவர்த்தித் திருமகன் இராமனே வணங்கத்தக்க பரம்பொருள் என்பதை உறுதியாக நம்புங்கள்! இராவணன் கொழுக்கும்படி அவனுக்கு வரம் கொடுத்த தேவதைகளின் பதவிகளுக்கு ஆபத்து வராமல் இருக்க, ஸ்ரீவைகுண்டநாதன் என்னும் தன் பெருமையைக் குறைத்துக்கொண்டு, பரமபதத்திலிருந்து இங்கே பூலோகத்திலே ஸ்ரீ இராமனாக வந்து, தன் வில்லாலே இலங்கையை அழித்தவனே வணங்கத்தகுந்த தெய்வம் என்பதை அறியுங்கள்! அவனே உங்கள் தடைகளைப் போக்கிக்காக்கும் தேவாதிதேவன் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்!

**வெறுப்பொடுசமணர்முண்டர் விதியில்சாக்கியர்கள்* நின்பால்**
**பொறுப்பரியனகள்பேசில் போவதேநோயதாகிக்***
**குறிப்பெனக்கடையுமாகில் கூடுமேல்தலையையாங்கே***
**அறுப்பதேகருமங்கண்டாய் அரங்கமாநகருளானே. (8)**

**அந்தோ! அரங்கா! உன்னை நிந்திக்கின்றனரே!**

அரங்கமா நகருளானே!

எவ்விதமாக உபதேசம் செய்தாலும், சக்கரவர்த்தித் திருமகனே வணங்கத்தகுந்தவன் எனக்கூறியும், சம்சாரிகள் வழக்கம்போல் உண்டியே, உடையே ஓடித் திரிபவர்களாய், புறச்சமயங்களில் ஈடுபட்டு உன்னை நிந்தனை செய்யும் அளவுக்குச் செல்கிறார்களே! இவர்களை என்ன செய்ய?

சில புறசமயத்தினர், திருநாளில் பெருமாள் எழுந்தருளினால் தூக்குப்போட்டுக்கொண்டு சாவதும், ஊதும் திருச்சின்ன ஒலி கேட்டால் முட்டிக்கொள்வதுமாக இருக்கின்றனரே! எம்பெருமானைப் பற்றிய நிந்தனையைக் கேட்டால் நாம் உடனே உயிரை விடவேண்டும்; அதற்குத்துணிவு இல்லாவிட்டால், நிந்தித்தவர் முகம் விழிக்காமல் அப்பால் போய்விடவேண்டும். அல்லது, வாய்ப்பு

கிடைத்தால், எம்பெருமானை இழித்துப்பேசினவன் தலையை அப்போதே அறுப்பதே செய்யத்தக்கது என்று தோன்றுகிறதே! அரங்கா! ரிஷிகள் முதலானோருக்குத் தீங்கிழைத்த இராவணனையும், மற்ற அரக்கரையும் தண்டிக்கும் உரிமை உனக்கே உண்டு. நிந்தித்தவர் உட்பட அனைவர் நன்மையைக் கருதி செயலாற்றும் தகுதி படைத்தவன் நீயே!

**மற்றுமோர்தெய்வமுண்டே மதியிலாமானிடங்காள்***
**உற்றபோதன்றிநீங்கள் ஒருவனென்றுணரமாட்டீர்***
**அற்றமேலொன்றறியீர் அவனல்லால்தெய்வமில்லை***
**கற்றினம்மேய்த்தவெந்தை கழலிணைபணிமினீரே.** (9)

__கண்ணன் கழல்களைப் பணியுங்கள்__

__சம்சாரி:__ "ஆழ்வாரே! இராமனை அணுகச்சொன்னீர்; ஆனால், அவனோ சக்கரவர்த்தித் திருமகன்; அவன் அரண்மனை வாசற்காப்போரால் காக்கப்படுபவன். அவனை அணுகமுடியாது; மேலும், வசிஷ்டர் முதலானோர் எங்கள் தகுதியின்மையைக்கண்டு உள்ளே விடமாட்டார்கள்! என்ன செய்வது?"

__ஆழ்வார்:__ "சரி, அப்படியானால், தகுதியோ, தகுதியின்மையோ பாராமல் நம்மேல் விழுந்து ஆட்கொள்ளும் கண்ணனைப் பற்றுங்கோள்! இயற்கை உறவினனான கண்ணனைத் தவிர வேறு தெய்வம் உண்டோ? அறிவு பெறத்தகுதியுள்ள மானிடப் பிறவியெடுத்தும், அறிவற்ற விலங்குகளைப்போலிருக்கும் மானிடர்களே! உங்கள் அறியாமைக்குக் காரணம், சாஸ்திரங்களில் மறைத்துச் சொல்லப்பட்டிருக்கும் உட்கருத்தை அறியாமையே!

மற்ற தெய்வங்களைப்போல் கண்ணன் ஆராதிப்பதற்கு அரியனல்லன். பசுக்களுக்கும், கன்றுகளுக்கும் கூட தானே முன் வந்து உதவி செய்து எளியவனாயிருப்பவன். தம்மைத்தாமே ரட்சித்துக்கொள்ளக்கூடிய வல்லமையற்ற கன்றுகளை மேய்ப்பதிலே

இவனுக்கு ஈடுபாடு அதிகம். ஆகவே, நான் அகப்பட்டுக்கொண்ட இந்தக் கிருஷ்ணாவதாரம் என்கிற துறையிலே நீங்களும் அகப்பட முயற்சியுங்கள். கன்றுகள் மேய்க்கும் அந்தச் செயலுக்கு வசப்பட்டு நான் கண்ணன் திருவடிகளில் விழுந்தேன். நீங்களும் அவனையே பற்றுங்கள்!''

**நாட்டினான்தெய்வமெங்கும் நல்லதோரருள்தன்னாலே*
காட்டினான்திருவரங்கம் உய்பவர்க்குய்யும்வண்ணம்*
கேட்டிரேநம்பிமீர்காள்! கெருடவாகனனும்நிற்கச்*
சேட்டைதன்மடியகத்துச் செல்வம்பார்த்திருக்கின்றீரே. (10)**

## செல்வம் தரும் தெய்வம் கருடவாகனனே!

சம்சாரிகளே! 'தண்துழாய் மாலை மார்பன்' என்கிற பரமபதநாதனை சென்றடைய முடியாது. ஆகவே, தேசத்தாலும், காலத்தாலும் அடையமுடியாத ஸ்ரீவைகுண்ட நாதனையும், ராமகிருஷ்ணர்களையும் போலன்றி, நாம் அனைவரும் எளிதில் இப்போதே வந்தடையும்படி இத்திருவரங்கத்திலே எம்பெருமான் சயனித்திருக்கிறார். மோட்சம் எனும் முக்தியடையவேண்டுமானால், அரங்கனைவிட்டு வேறொரு தெய்வத்தைப்பற்றுவது, செல்வம் வேண்டி, செல்வத்துக்கு நேரெதிர்தட்டான மூதேவியைப் பற்றுவது போலாகும் என்பதை அறிவீர்!

சம்சாரிகளே! பகவானைத்தவிர மற்ற விஷயங்களில் எதையாவது பெற்று உங்களை நிறைவாளர்களாகத் தவறாக நினைத்திருக்கும் நீங்கள், இப்போதாவது நான் சொல்லும் உட்பொருளை, அர்த்தத்தைக் கேட்கிறீர்களா? வேதஸ்வரூபனான கருடனை வாகனமாகக் கொண்டிருப்பவனே வணங்கத்தக்கவன்: அந்தக்கருடன் கழுத்திலே வீறுதோன்ற வீற்றிருத்தல், திருச்சக்கரத்தை அலுங்காமல் ஏந்துதல், மங்களங்களுக்கெல்லாம் அதிதேவதையான லட்சுமிதேவிக்கும் நாதனாயிருத்தல் ஆகிய

இம்மூன்றில் ஒவ்வொன்றும் இவனே சர்வேஸ்வரன் - அமரர்கள் அதிபதி - தேவாதிதேவன் என்பதை அடையாளம் காட்டும்! எப்போதும் சத்வகுணத்தில் ஊன்றிருப்பவர்கள் பெறும் மோட்சத்தை, ராஜச, தாமஸ தெய்வங்களை வணங்கி எப்படிப் பெறுவது? சிந்தியுங்கள்.

**ஒருவில்லாலோங்குமுந்நீர் அனைத்துலங்களுய்ய***
**செருவிலேயரக்கர்கோனைச் செற்றநம்சேவகனார்***
**மருவியபெரியகோயில் மதிள்திருவரங்கமென்னா***
**கருவிலேதிருவிலாதீர் காலத்தைக்கழிக்கின்றீரே.** (11)

**கருவிலே திருவிலாதீர்! காலத்தை வீணாக்குகிறீரே!**

சம்சாரிகளே! எளிமையே உருவாக - எளிமையின் எல்லை நிலமாக, எல்லோரும் வணங்கத்தக்கவனாக, நான் சொன்ன இராமன் உங்களுக்கு உதவுவதற்காகவே திருவரங்கத்திலே எழுந்தருளி சயனித்திருக்க, அவன் திருநாமத்தைச் சொல்லி உய்ந்துபோகும் பாக்கியமில்லாமல் காலத்தை இப்படி வீணாக்குகின்றீர்களே!

அன்று இராவணன் கண்முன்னேயே அவன் இறுமாப்புக்குக் காரணமான அவன் துணைவரையெல்லாம் அழித்து, அவன் பிள்ளைகளையும் அழித்து, உலகில் எவர்க்குமே நேராத அவமானமாகத் தன் தலைகள் ஒவ்வொன்றாக அறுபட்டு கீழே விழுந்து புரள்வதைத் தானே கண்ணாலே காணும்படி செய்த அந்த மாவீரன், மனமிரங்கி, ''இன்று போய் நாளை வா'' என்று வீரத்தின் எல்லை நிலமாய் அருளிச்செய்த அந்த இராமனை வணங்கவேண்டாமா? பக்தியுடைய சாமானியர் ஒரே ஒரு அஞ்சலி செய்தால், கைக்கூலி வாங்குகிறவன் தன் எஜமானனுக்கு ஆட்பட்டிருப்பது போல, காலம் உள்ளவரை உங்களுக்கு சேவகம் செய்வானே இராமன்!

எம்பெருமானை நம் சேவகனாக்குவது இவ்வளவு எளிதாயிருக்க, இதைக்கூட நீங்கள் செய்யாததன் காரணம், நீங்கள் கர்ப்பத்தில் இருக்கும்போது, பகவத் கடாட்சம் ஏற்படாததே! கருவிலே, திருவிலாதாராய் இருந்துவிட்டீர்களே!, எம்பெருமானை அடைந்து, அனுபவித்து, அவனுக்கு இடைவிடாமல் கைங்கர்யம் செய்யும் காலத்தை வீணாக்குகிறீர்களே! பரமபதத்தில் நித்யசூரிகளுக்குக் கிடைக்கும் அனுபவத்தை உங்களுக்கெல்லாம் எளிதாகக்கொடுக்க வேண்டும் என்று அவன் ஆர்வத்துடன் இங்கே திருவரங்கத்திலே கிடக்க, நீங்களோ வேறு எதையெல்லாமோ பற்றித்திரிகின்றீரே!

**நமனும்முற்கலனும்பேச நரகில்நின்றார்கள்கேட்க***
**நரகமேசுவர்க்கமாகும் நாமங்களுடையநம்பி***
**அவனதூரரங்கமென்னாது அயர்த்துவீழ்ந்தளியமாந்தர்***
**கவலையுள்படுகின்றாரென்று அதனுக்கேகவல்கின்றேனே.** (12)

<u>அவன் ஊர் அரங்கம்! அறிந்துகொள்ளுங்கள்:</u>

<u>**சம்சாரிகள்:**</u> ''எங்கள் வாயாலே பகவானின் திருநாமங்களைச் சொல்லச்சொல்கிறீர்! ஆனால், நாங்கள் செய்துள்ள பாவங்களாலே கண்ட விஷயங்களைப்பற்றி கண்டபடி பேச முடிகிறதே தவிர, திருநாமம் சொல்ல முடிவதில்லையே.''

<u>**ஆழ்வார்:**</u> அப்படியேயிருந்தாலும், திருநாமம் மற்றவர் சொல்வதைக் கேட்டாலே நீங்கள் பயனடைவீர்கள். அதற்குத் திருவரங்கம் ஏற்ற இடம். இதுகூட தெரியாமல் சம்சாரத்தில் உழலும் உங்கள் துன்பம் என்னால் பொறுக்கமுடியவில்லை. 'முத்கலன்' என்பான் ஒருவன் பாவமே செய்து கொண்டிருந்தான். ஒரு சமயம் பாவத்தின் பரிகாரமாக அவன் எள்ளினால் ஆன பசுவை ''கிருஷ்ணார்ப்பணம்'' என்று சொல்லி தானம் செய்தான். அவன் மரணமடைய, எமன் அவனை உபசரித்து வரவேற்க முத்கலன், 'பாவமே செய்த என்னை ஏன் உபசரிக்கிறாய்?' என்று கேட்க, எமன்,

``நீ எம்பெருமானின் திருநாமம் 'கிருஷ்ணா' என்று ஒரு முறை சொன்னாய், ஆகவே, வரவேற்றேன்'' என்றான். அதைக் கேட்டுக்கொண்டிருந்த நரகத்திலுள்ளோர், திருநாமத்தைக் காதால் கேட்ட பயனாக சொர்க்கானுபவம் பெற்றனர். திருநாமமே நரகத்தை சுவர்க்கமாக்கியது. ``இப்படி திருநாமத்தாலே நிறைவு பெற்றவர் எப்போதும் வாழும் ஊர் திருவரங்கம்'' என்று ஊரின் பெயரைச் சொன்னாலே போதுமே! இப்படி ஆயாஸம் மிகக் குறைவாய், பலன் மிகப்பெரிதாய் இருக்கும் திருநாமத்தைச் சொல்லாதபடி தடுக்கும் பாபத்தின் மிகுதிதான் என்னே! இதைக்கண்ட நான் மிகுந்த வேதனை அடைகின்றேன்! சொல்வதற்கே இனிமையான, சுவையான திருநாமம் சொல்லத்தகுதியுடைய சம்சாரிகளாகிய நீங்கள், சொல்லிச்சொல்லி ஆனந்தப் படவேண்டியவர்கள், ஏனோ சொல்லாமலே துன்பக்கடலிலே மூழ்கிக் கிடக்கிறீர்களே! அந்தோ!

**எறியுநீர்வெறிகொள்வேலை மாநிலத்துயிர்களெல்லாம்***
**வெறிகொள்பூந்துளபமாலை விண்ணவர்கோனையேத்த***
**அறிவிலாமனிசரெல்லாம் அரங்கமென்றழைப்பராகில்***
**பொறியில்வாழ்நரகமெல்லாம் புல்லெழுந்தொழியுமன்றே. (13)**

**<u>உலகமே புல்முளைத்துப் போகும்!</u>**

சம்சாரிகளே! உங்கள் பிறவி எம்பெருமானுக்காகவே ஏற்பட்டிருப்பதை அறியவில்லையாயினும், ஒரு காரணமுமில்லாமல் உங்கள் வாயாலே ``திருவரங்கம்'' என்று சொன்னால் போதுமே! உடனே, நரகம் போன்ற இந்த சம்சாரமே புல்முளைத்துப் போயிருக்குமே!

பகுத்தறிவுள்ள மனிதப்பிறவியிலே பிறந்தும், அறிவற்றுப் போனதால், அறியாமையாலே திருவரங்கத்திலே ஈடுபாடு இல்லாமலிருந்தாலும், ``திருவரங்கம்'' என்று ஒரு சொல் சொன்னால் போதுமே! 'தான் வாழ்வதே வாழ்ச்சி' என்னும்

மயக்கத்தை விளைப்பதால், பரமபதத்திற்குச் செல்லவேணும் என்ற இச்சை விளையாதபடி செய்வதான இந்த சம்சாரமே ஓர் நரகம் என அறியுங்கள்! திருவரங்கம் என்று சொன்னாலே லீலா விபூதி எனப்படும் உலகில் உள்ள ஜீவர்கள் அனைவரும் பரமபதம் சென்றுவிடுவார்களே! ஆகையாலே, இந்தப்பூலோகம் உயிர்களாகிற பயிர்களற்ற தரிசாகப்போய்விடுமன்றோ!

**வண்டினமுரலும்சோலை மயிலினமாலும்சோலை***
**கொண்டல்மீதணவும்சோலை குயிலினம்கூவும்சோலை***
**அண்டர்கோனமரும்சோலை அணிதிருவரங்கமென்னா***
**மிண்டர்பாய்ந்துண்ணும்சோற்றைவிலக்கி நாய்க்கிடுமினீரே. (14)**

## நன்றியிலாதவர்க்கு சோறா?

சம்சாரிகளே! உங்களை நேருக்குநேர் பார்த்து உபதேசித்தேன்! ஆனால் நீங்கள் கேட்கவில்லை! பகவத் விஷயத்தில் ஈடுபடவில்லை!

ஆகவே, அடியேனுக்கு வெறுப்பும், சலிப்புமே மிஞ்சிற்று. என் மனமே! வாய் கசப்புபோக கற்கண்டு கட்டியை வாயிலிட்டுக் கொள்வாரைப்போல, திருவரங்கத்தின் இனிமையை அனுபவித்தேன்! இதேபோன்று சம்சாரிகளும் இந்தச்சுவையை அனுபவிக்காமலிருக்கின்றனரே! நன்றியில்லாத மூர்க்கர்கள், இப்போது தாங்களிருக்கும் நிலையையும், வரப்போகும் நிலையையும் அறியாதவர்கள். நரகவாசம், கர்ப்பவாசம் முதலானவை பிடரியைப்பிடித்துக்கொண்டு நிற்க, உண்டியே, உடையே உகந்து, சம்சாரத் துன்பங்களிலே உழல்பவர்கள்! இறைவன் இந்த மூர்க்கர்களைத் திருத்த இந்த ஊரில் பொருந்திக்கிடக்கும்போது, அவன் வாழும் ஊரின் பெயரைக்கூட வாயால் சொல்லவும்மாட்டாத மூடர்கள்! இப்படிப்பட்ட அறிவிலிகள் ''திருவரங்கம்'' என்று வாயாலே சொல்லமாட்டாத நன்றிக் கெட்டவர்கள்! அவர்கள் எம்பெருமான் பொருளைக்

கொள்ளையடித்தே வாழ்பவர்கள்! ஆகவே, அவர்கள் தின்ன இருக்கும் சோற்றை அவர்களிடமிருந்து பறித்து, அதை வாசலைப்பற்றிக்கிடக்கும் நாய்க்கு இடுமின்! இது நல்லோர்க்கு நான் இடும் கட்டளை!

**மெய்யர்க்கேமெய்யனாகும் விதியிலாவென்னைப்போல***
**பொய்யர்க்கேபொய்யனாகும் புட்கொடியுடையகோமான்***
**உய்யப்போமுணர்வினார்கட்கு ஒருவனென்றுணர்ந்தபின்னை***
**ஐயப்பாடறுத்துத்தோன்றும் அழகனூரரங்கமன்றே. (15)**

***<u>ஆழ்வார் தன் நெஞ்சுடன் உரையாடல்: மெய்யர்க்கு மெய்யன்!</u>***

நெஞ்சே! எம்பெருமான் எந்தக்காரணமுமின்றி (நிர்ஹேதுகமாய்) அடியேனுக்கு எவ்வளவோ நன்மைகள் அருளியுள்ளான். நெடுங்காலமாக உலகவிஷயங்களில் ஈடுபட்டு, எம்பெருமானை வெறுத்து, ஒதுக்கி, பொய்யனாக வாழ்ந்துவந்தேன். அவனும் என்னிடம் நெருங்காமல் பொய்யனாகவே இருந்தான். எனக்கு அவனிடமிருந்த வெறுப்பு, துவேஷம் நீங்கி அத்வேஷம் ஏற்பட்டதுமே நான் மெய்யனானேன். அவனும் என்னிடம் அன்பு கொண்டு, என்னை மேல்விழுந்து ஆட்கொண்டதால் அவனும் மெய்யனானான்.

மனம், மெய் மொழிகளால் ஒருபடிப்பட்டிருக்கும் எம்பெருமானுக்காகவே ஆன வாழ்வில் ஊன்றிக்கிடக்கும் மஹாத்மாக்களுக்கு எப்படி பகவான் தன் அருளைப் பொழிகின்றானோ, அதுபோன்றே, திருந்திய வாழ்வு மேற்கொண்டு அத்வேஷம் (வெறுப்பின்மை) ஒன்று மட்டும் என்னிடம் பிறந்தவுடனே, 'எம்பெருமான் உளன்' என்ற அறிவு வந்ததுமே, என் ஐயப்பாட்டை அறுத்து அவன் தன் பெருமைகளையெல்லாம் காட்டிக்கொடுத்தான்: நானும் அவைகளை அனுபவித்தேன். ஏனெனில் அவனுக்கும் எனக்கும் பிதா-புத்ர சம்பந்தம். அவன் நம்

எல்லோரிடமும் வெறுப்பின்மை, விலக்காமை ஒன்றையே எதிர்பார்க்கிறான்.

'பழுதே பலகாலும் போயின' என்று அஞ்சி அழுத நான், பொய் வாழ்க்கை வாழ்ந்த நிலையிலிருந்து மீண்ட நான், உய்யும் வழி யாதோ? என்னும் சிந்தனை ஏற்பட்டதும், ''ஈஸ்வரன் உளன்'' எனும் அறிவு பிறந்தபின், ''தேகம் தவிர, ஆத்மா உண்டு: ஆத்மாவுக்கு ஸ்வாமி ஈஸ்வரன்'' எனும் ஞானம் பிறந்ததும், அவனே வலிய வந்து என் சந்தேகங்களையெல்லாம் போக்கி, விரோதிகளை விலக்கி, அவனே அடையத்தக்கவன் என்ற உணர்வினையும் எனக்கு அருளினன்.

**சூதனாய்க்கள்வனாகித் தூர்த்தரோடிசைந்தகாலம்***
**மாதரார்கயற்கணென்னும் வலையுள்பட்டழுந்துவேனை***
**போதரேயென்றுசொல்லிப் புந்தியுற்புகுந்து* தன்பால்**
**ஆதரம்பெருகவைத்த அழகனூரரங்கமன்றே. (16)**

**ஆதரம் பெருகவைத்த அழகன்!**

நெஞ்சே! ''எம்பெருமானே இலக்கு! அவனை அடையும் வழியும் அவனே! உபாயமும், உபேயமும் அவனே!'' என்ற அறிவை அளித்தவன், ''ஆதரம்'' எனும் அன்பையும் பெருவெள்ளமாக என்மேல் பொழிந்தானே!

நல்லவர் தங்கள் ஆத்மாவை எம்பெருமானுடையது எனத்தெரிந்து அவனுக்கே அடிமையாகவும், எம்பெருமானே ஆத்மாவுக்கு ஸ்வாமி என உணர்ந்து, அவன் உகந்ததே புண்ணியம், அவன் விரும்பாதது பாபம் எனும் கொள்கையுடன் வாழ்ந்து இருக்க, அதெல்லாவற்றையும் பலவிதமான யுக்திகளால் மறுத்து, எல்லாமே பொய் என்று கூறி அவர்களை மயக்கி, தன்னைப்போலவே, அவர்களையும் நாத்திகராக்குவது என்ற சூதரொடு சேர்ந்து, சர்வேஸ்வரனை விட்டு விலகி, இயல்புக்குத் தகாத

உலக விஷயங்களிலே மண்டித்திரிபவருடன் பொருந்தி நான் வாழ்ந்த அந்தக் காலம், பெண்களின் கண்வலையில் அகப்பட்டு மூழ்கிக்கிடந்த அந்தக்காலத்தில், துன்பத்தை இன்பம் என்று மயங்கி இருந்த என்னை பெரியபெருமாள் எப்படி மீட்டார்? ``மாதர் கண்ணழகில் ஈடுபட்ட இவரை நம் கண்ணழகு காட்டி மீட்போம்'' என்று திருவுள்ளம் பற்றி தன் திருத்திரையை எடுத்துவிட்டு, என் முன் நின்று தம் திருமுகத்தைக் காட்டினார். ``உயிர்க்கெல்லாம் தாயாய் அளிக்கின்ற செந்தாமரைக்கண்'' ணுடையான், 'போதரே' என்று சொல்லாமல் சொல்லி, என்னை மயக்கும் மாதர்களிடமிருந்து மீட்டான். என் நெஞ்சுக்குள் அந்தர்யாமியாய் இருந்தவன், இப்போதுதான் புகுந்தவன் போல் நினைவுகள் புறப்படும் என் நெஞ்சுக்குள் புகுந்து நிலைத்து நின்றான். பலப்பல ஆண்டுகளாக தகாத விஷயங்களில் செலுத்திய என் அன்பைத் தன்னிடம் செலுத்தும்படி செய்துவிட்டான்.

தரிசிலே பாய்கிற நீரைத் திருப்பிப் பயிரிலே பாயச்செய்வதுபோல, என் அன்பைப் பயனுள்ளதாக்கினான்.

எம்பெருமானின் அழகு, கர்ம, ஞான யோகஸ்தானத்தில் நின்று என் பக்தியை வளர்த்தது. அவன் அழகே எனக்கு ஸாதனம்.

ஸம்சாரிகளுக்கு ருசி பிறந்தபோது புகுந்து அனுபவிக்கும் இடமே திருவரங்கம்! என்பதை அறிந்துகொள் நெஞ்சே!

**விரும்பிநின்றேத்தமாட்டேன் விதியிலேன்மதியொன்றில்லை***
**இரும்புபோல்வலியநெஞ்சம் இறைஇறையுருகும்வண்ணம்***
**சுரும்பமர்சோலைசூழ்ந்த அரங்கமாகோயில்கொண்ட***
**கரும்பினைக்கண்டுகொண்டு என்கண்ணிணைகளிக்குமாறே. (17)**

## இரும்பு நெஞ்சு உருகிவிட்டதே!

அரங்கா! முன்பு நான் எப்படியெல்லாமோ வாழ்ந்தேன்! 'எம்பெருமான்' என்கிற சிறந்த விஷயத்தைக் கண்டால் மேல்விழுந்து

மிக்க ஆர்வத்துடன், உன்னை வாயால் துதிக்கவேண்டுமே! ஆனால் அதை நான் செய்யவில்லை. உன்னைத்துதி செய்ய, வாக்காகிற இந்திரியத்துக்கு சக்தியில்லாமல் இருந்து உன் சிறப்பை அறியாதது மட்டுமல்ல: நீ ஒருவன் உண்டு என்ற அறிவு கூட எனக்கு இல்லை.

இரும்பைக்கூட நெருப்பாலே உருக்கிடலாம். ஆனால், இந்த வலிய நெஞ்சம் தேவரீராலும் திருத்த முடியாமல் இறுக்கமாகவே இருந்தது.

இப்போதோ. உம் அழகு என்னும் மழை என் மீது பொழிந்தவுடன், என் மனமும் சிறிது சிறிதாக உருகிவிட்டது. வயிரத்தால் அறுக்கப்பட்ட வயிரம்போல், இறுகிய நிலத்தையும் தளர்த்திய மழைபோல், இப்போது என் நெஞ்சு நெகிழ்ச்சியடைந்தது. என்னே உன் பெருமை!

நரகத்தை அளிக்கும் மற்ற விஷயங்களைக் கண்டுகளித்து வந்த என் கண்களே அன்றோ இப்போது இவ்விஷயத்தைக் கண்டுகளிக்கின்றன! கண்களை உடையவனான என்னையும் சட்டை செய்யாமல் தானாகவே உன் அழகைக் கண்டுகளிக் கின்றனவே!

நெஞ்சில் அன்பிருந்தாலும், அந்த அன்பு வெளிப்படாமல் உடல்கட்டு அழியாமலிருக்கும் ஸம்சாரிகளைப்போல் அல்லாமல், கண் முதலிய இந்திரியங்களும் (அசேதனங்களும்) உன்னைக் கண்டு சேதனரைப்போல் களிப்படையும்படி செய்தாயே!

**இனிதிரைத்திவலைமோத எறியுந்தண்பரவைமீதே***
**தனிகிடந்தரசுசெய்யும் தாமரைக்கண்ணனெம்மான்***
**கனியிருந்தனையசெவ்வாய்க் கண்ணனைக்கண்டகண்கள்***
**பனியரும்புதிருமாலோ என்செய்கேன்பாவியேனே. (18)**

## கண்ணீர் மறைக்கின்றதே!

அரங்கா! உன்னைக்கண்ட என் கண்கள் களிப்பு மிகுதியால் ஆனந்தக்கண்ணீரைச் சொரிகின்றது. அந்தக்கண்ணீர் வெள்ளம் சுவர்போல் மறைத்து நின்று அடியேன் உன்னை அனுபவிக்கமுடியாமல் தடுக்கின்றதே!

எம்பெருமானே! ''நீ என்னுடையவன்'' என்று சொன்னாய். நான் கேட்கவில்லை, ''நான் எனக்கே உரியவன்'' என்று அகங்காரமாகச் சொல்லிக்கொண்டிருந்தேன். ஆனால், நீ உன் அழகைக்காட்டி, என்னைத் திருத்திப்பணிகொண்டாய்; ''நான் எனக்கே உரியேனல்லேன்; உனக்கே உரியவன்'' என்று சொல்லும்படி என்னைச் செய்துவிட்டாய். நித்யசூரிகளைப்போல், இங்கே உள்ளவர்களும், அகங்கார, மமகாரம் அற்றவர்களாகும்படி செய்துகொண்டு கண் வளர்கிறாய்!

பெரியபெருமாளான உன்னைச்சேவித்தால், அவதார காலத்தில் இல்லாத இக்காலத்தவர்கட்கும் உதவ இராமனும், கண்ணனும் வந்து இங்கு கண்வளர்கிறான் என்று நினைக்கத்தோன்றுகிறது. ''யசோதைப்பிராட்டி, பிள்ளை மனம் கன்றாமல், அவன் என்ன துஷ்டத்தனம் செய்தாலும் கண்டிக்காமல், அவன் மேலும் மேலும் தீம்பு செய்யும்படி வளர்த்த முசுமுசுப்பெல்லாம் தோன்றும் பெரியபெருமாளைக் காணும்போது''.

''வசிஷ்டரின் பழக்கத்தால் அடக்கம் நன்கு விளங்கும்படி இருப்பவனான இராமனை நினைக்கும்படி இருக்கும் நம் பெருமாளைக் காணும்போது''.

அரங்கா! கண்ணீர் பெருகுவதற்கு இடைவெளியிருந்தால் அந்தச் சமயத்தில் உன்னை சேவிக்கலாம்; அதற்கும் இடைவெளி இல்லாதபடி கண்ணீர் இடைவிடாமல் பொழிகின்றதே! அனாதி காலமாக எனது பாபத்தாலே. இவ்விஷயத்தை அறியாமையாலே

அனுபவியாமலிருந்துவிட்டேன். உன்னை அறிந்த இன்றோ என் கண்ணீர் மறைக்கையாலே அனுபவிக்கமுடியவில்லை. என் அனுபவம் இப்படி வெள்ளக்கேடும், வறட்சிக்கேடுமாய் ஆகிவிட்டதே!

**குடதிசைமுடியைவைத்துக் குணதிசைபாதம்நீட்டி***
**வடதிசைபின்புகாட்டித் தென்திசையிலங்கைநோக்கி***
**கடல்நிறக்கடவுளெந்தை அரவணைத்துயிலுமாகண்டு***
**உடலெனக்குருகுமாலோ என்செய்கேனுலத்தீரே. (19)**

<u>உருகுதே உடல்</u>

திருவரங்கா! நின் அழகைக்காட்டி என் கண்கள் களிப்பினால் ஆனந்தக்கண்ணீர் வெள்ளமாகப் பெருகச்செய்தாய்! 'கிடந்ததோர் கிடக்கை' என்கிற உன் சயனக்கோல அழகினால் என் உடல் முழுதும் கட்டழிந்து உருகுகின்றதே! பக்தர்களுக்கு உன்னிடம் ருசி பிறக்கவே நீ முடிவைத்தல், அடி நீட்டல் முதலியன செய்ய பல திக்குகளைப் படைத்தாயோ! நீயே எல்லா உலகங்களுக்கும் நாயகன் எனக் காட்டவிளங்கும் உன் திருமுடியை மேற்கு திக்கிலுள்ளோர் பயன்பெற்று வாழ அத்திக்கைநோக்கி வைத்தாய்!

எல்லா உலகங்களும் வாழ்ச்சிபெற. ''மூவுலகும் தொழுதேத்தும் சீரடியான்'' எனும் நின் திருவடிகளை கிழக்குதிக்கு வாழ நீட்டினாய்! வடமொழி சான்றோர்கள் வாழும் வடக்கு திசை, ஆழ்வார்கள் ஈரச்சொல் நடமாடாத இடமாகையாலே, அந்தத்திக்கில் இருப்பவரைத் திருத்த, முன்னழகைக் காட்டிலும் சிறந்த பின்னழகை வடக்குதிக்கிற்குக் காட்டினாய். தனக்குத் தாரகரான விபீஷணாழ்வானின் இலங்கை நோக்கி, அன்போடு தென்திசை நோக்கி பள்ளிகொண்டாய்! மிகச்சிறந்த ரத்தினத்தை, மிகச்சிறந்த பொன் தகட்டிலே பொருத்தினாற்போலே, ஆதிசேஷன் மேல் சாய்ந்ததால் இவ்வடிவழகு மேலும் ஒப்பற்றதாக விளங்குகின்றதே! ஆதிசேஷன் மேலே எம்பெருமான் ஸயனிப்பதுகண்டு அதை

அனுபவிக்கமாட்டாத ஜடமான இந்தச் சரீரம் உருகுகின்றதே! என் செய்வேன்? சம்சாரிகளே! பெரியபெருமாளின் அழகைக் கண்டபின்பும் சிறிதுகூட வேறுபாடு அடையாமல் திடமாக சந்நிதியைவிட்டு வெளியே செல்லும் ரகசியம் என்ன? உடம்பை இறுக்குவாதம் வந்ததுபோல விகாரமில்லாமல் செய்ய நீங்கள் சாப்பிட்டிருக்கும் மருந்திலே ஒரு கை அளவாவது எனக்குக் கொடுக்கக்கூடாதா?

**பாயுநீரரங்கந்தன்னுள் பாம்பணைப்பள்ளிகொண்ட***
**மாயனார்திருநன்மார்வும் மரதகவுருவும்தோளும்***
**தூயதாமரைக்கண்களும் துவரிதழ்ப்பவளவாயும்***
**ஆயசீர்முடியும்தேசும் அடியரோர்க்ககலலாமே.** (20)

<u>**அகலமுடியுமோ உன்னிடமிருந்து!**</u>

**<u>சம்சாரி:</u>** ஆழ்வாரே! நீரும் எங்களைப்போல உண்டியே, உடையே உகந்திருந்தால், உம்முடைய உடலும் பெரிய பெருமாளைக் கண்டு உருகாமல் இருக்குமே!

**<u>ஆழ்வார்:</u>** அதெப்படி சாத்யம்? ``இப்படிக் கண்வளர்ந்திருப்பதே உங்களுக்காகவே`` என அவன் அழகே வடிவெடுத்து ஸயனித்திருக்க, அகங்கார, மமகாரம் கொண்ட உங்களைப்போல் எப்படி என்னால் அவன் அழகில் ஈடுபடாமல் இருக்கமுடியும்?

ஆழ்வார்களும், ஆசார்யர்களும் இவன் அழகில் மயங்கி, இங்கே படுகாடு கிடந்தார்களே! கண் வளரும்போதுள்ள அழகைக்கண்டு ஆச்சர்யப்படாமல் இருக்கமுடியுமோ? ஒருவேளை நின்றதிருக் கோலத்திலோ, வீற்றிருந்ததிருக்கோலத்திலோ இருந்தால் அவனை வணங்கிப் பின்னகலலாம், ஆனால் எம்பெருமான் கிடந்த கோலத்தில் அவனை விட்டு அகல முடியாது.

எம்பெருமானின் நன்மார்பும், மரதகவுருவும், தூயதாமரைக் கண்களும், சிவந்த திருஅதரங்களும், பவளவாயும், சிறப்புடைய

திருமுடியும் எல்லாமே பெரியபெருமாளின் முழுமையான (ஸமுதாய) சேவை தேஜஸ், திருமேனி அழகு முழுவதுமாக விவரிக்கமுடியுமோ?

பெரியபெருமாளின் இந்த வடிவழகின் பெருமையைக்கண்டால், சொரூப ஞானமுடைய அடியேனைப்போன்றோரால் அவனை விட்டு அகலமுடியுமோ?

**பணிவினால்மனமதொன்றிப் பவளவாயரங்கனார்க்கு***
**துணிவினால்வாழமாட்டாத் தொல்லைநெஞ்சேநீசொல்லாய்***
**அணியினார்செம்பொனாய அருவரையனையகோயில்***
**மணியனார்கிடந்தவாற்றை மனத்தினால்நினைக்கலாமே. (21)**

<u>அளவிடமுடியுமோ உன்னழகு?</u>

<u>நெஞ்சு:</u> "பெரியபெருமாளை விட்டு அகலமுடியாது என்றால், அவருடைய அழகை அளவிட்டு அனுபவிக்க முயலலாமே!"

<u>ஆழ்வார்:</u> நெஞ்சே! அனாதிகாலமாக இவ்விஷயத்தை அனுபவிக்கும் உறுதியில்லாமையால் கிடந்த உன் அறிவின்மையே, இப்போது நீ இவ்விஷயத்தை அளவிட்டு அறிந்துவிடலாமென நினைப்பதும். "பெரியபெருமாளைப் பணிவோம்" என்று உறுதி பூண்டு. மற்றவிஷயங்களிலிருந்து மனதை மீட்டு, இவ்விஷயத்தில் ஊன்றி ஈடுபடத்தொடங்கி ஒன்றினேன்.

பணிவும், துணிவும் கூட நானே விளைத்துக் கொண்டதல்ல.

வடிவழகு தானே பணிவையும், துணிவையும் உண்டாக்கி அனுபவமாகிற வாழ்ச்சியிலும் மூட்டிவிட்டது.

மேருமலையை நடுவிலே துளைத்து, அப்படித்துளைத்ததாலே சுற்றிலும் விம்மியிருக்கும் அதன் நடுவில் ஒரு நீல ரத்னத்தை அழுத்தினது போலாயிற்று ஸ்ரீரங்கவிமானத்துக்குள்ளே பெரியபெருமாள் கண்வளர்ந்தருள்கிறபடி. இந்த அழகைப்பார்க்கும் போது, அது நெஞ்சாலே அளவிடலாம்படி இருந்ததோ? அல்லவே!

ஸ்வரூபத்தையும், அதிலுள்ள கல்யாண குணங்களையும் கூட அளவிட்டுவிடலாம். திருமேனியின் அழகை ஒருபோதும் அளவிடமுடியாது. மனத்தினால் நினைத்துப் பார்ப்பதும் முடியாது, முடியவே முடியாது!

**பேசிற்றேபேசல்லால் பெருமையொன்றுணரலாகாது***
**ஆசற்றார்தங்கட்கல்லால் அறியலாவானுமல்லன்***
**மாசற்றார்மனத்துளானை வணங்கி நாமிருப்பதல்லால்***
**பேசத்தானாவதுண்டோ பேதைநெஞ்சேநீசொல்லாய்.** (22)

**<u>பேசிற்றே பேசுவோம் அவன் பெருமை</u>**

**<u>நெஞ்சு:</u>** "அவன் திருமேனி அழகை (நெஞ்சால்) நினைக்கமுடியாவிட்டாலும், வாய்விட்டுப் பேசலாமே".

**<u>ஆழ்வார்:</u>** அறிவுகெட்ட என் நெஞ்சே! மனத்தால் நினைத்தால் தானே வாய்விட்டுப் பேச முடியும்? சொல்! "வாய்கொண்டு உலக விஷயங்களையெல்லாம் பேசுகிறோமே! அதைப்போல் இதையும் பேசலாம்" என்று நீ சொன்னால் அதுவும் சரியில்லை; ஏனெனில், உலக விஷயங்களெல்லாம் அளவு பட்டவை: பகவானின் திருமேனி அழகு அளவே இல்லாதது, ஆகவே பேசமுடியாது.

முன்பு வேதங்களும், அவைகளைப் பிரமாணங்களாகக் கொண்டவர்களும், இவ்விஷயத்தைப்பற்றி பேசின பெருமைகளையே நாம் திருப்பிச்சொல்லலாமே தவிர, நாம் ஏதோ புதிதாகப் பாசுரமிட்டு பேசி முடித்துவிடமுடியாது.

"சுட்டுரைத்த நன்பொன் உன் திருமேனி ஒளி ஒவ்வாது" என்பது போல் ப்ராக்ருத வஸ்துக்களை - தாழ்ந்த வஸ்துக்களை - உபமானமாகப் பேசியிருக்கிறார்கள். கண் முதலிய இந்திரியங் களுக்குப் புலப்படாத பகவத் விஷயத்தைச் சொல்லும்போது. அவற்றுக்குப் புலப்படும் சில விஷயங்களையே ஒப்பிட்டுக்

கூறவேண்டியுள்ளதால், எல்லாமே மிகச் சரியான உபமானம் பேசி முடித்ததாகக் கூறமுடியாது.

எம்பெருமானின் சொரூபம், குணம், விக்ரகம், விபூதி (செல்வம்) ஆகிய எதையும் வேறொன்றுடன் ஒப்பிட்டுப்பேசமுடியாது.

எம்பெருமானே! இச்சேதனன் உனக்கு அடிமை, நான் இதைச்செய்தேன், அதைச் செய்தேன் என்று அகங்காரமாக நினைத்து உன்னிடம் பலன் எதிர்பார்க்கவில்லை; நீயே உபாயம், உன் இரக்கமே (சித்ததர்மமே) உபாயம், உன்னை உள்ளபடி அறிய யாராலும் முடியாது. நீயே அடையத்தக்கவன்; வேறு பலன்களை எதிர் பார்க்காத "மாசற்றார்" உன்னையே விரும்புவது.

ஆசும், மாசும் அற்ற பக்தன் ஒருவன் நெஞ்சில்தான் இடம் பெற்று, வாழ்ச்சிபெறவேணும் என்றே நீ திருவரங்கத்திலும், மற்ற திவ்யதேசங்களிலும் வாசம் செய்கிறாய்.

மனம், மெய், மொழி எனும் முக்கரணங்களாலும், ஸர்வகாலங்களிலும், ஸர்வ தேசங்களிலும் செய்யும் எல்லாவிதமான பகவத் அனுபவங்களைத் தவிர, புதிதாக பாசுரம் சொல்லி என்னால் உன் பெருமையைப் பேசிவிடமுடியாது.

**கங்கையிற்புனிதமாய காவிரிநடுவுபாட்டு***
**பொங்குநீர்பரந்துபாயும் பூம்பொழிலரங்கந்தன்னுள்***
**எங்கள்மாலிறைவனீசன் கிடந்தோர்கிடக்கைகண்டும்***
**எங்கனம்மறந்துவாழ்கேன் ஏழையேனேழையேனே (23)**

**<u>கிடந்ததோர் கிடக்கை:</u>**

**<u>நெஞ்சு:</u>** "நினைக்கவும் முடியாது, பேசவும் முடியாது என்றால், அவனையே மறந்து இருக்கலாமே".

**ஆழ்வார்:** நெஞ்சே! பெரியபெருமாளுடைய கிடந்த திருக்கோலத்திலே மிகவும் ஈடுபட்டிருக்கும் நான் எப்படி அவனை மறந்து வாழ்வேன்?

தேவதேவனுடைய அருளாலே கங்கையுடன் சமமாயிருக்கும் தன்மையை அடைந்த காவிரி, ரங்க விமானம் அங்கு பிரதிஷ்டமான பின்பு கங்கையைக் காட்டிலும் சிறப்புடையதானது. பெரிய பெருமாள் இதன் நடுவே நித்யவாசம் செய்கையால் புனிதமானது. அவன் எங்கள் மால்! அடியார்பக்கம் அன்பே ஒரு வடிவு கொண்டதுபோல் காட்சியளிப்பவன்!

எங்கள் மால், இறைவன், ஈசன் அடியார்களிடம் வெள்ளமென அன்பு கொண்டவன். அடியார்களின் சொரூபத்துக்குத்தக்க ஸ்வாமியாய், அவர்களை நல்வழி நடத்த வல்லவனாய் எழுந்தருளியுள்ளான். திருமாலடியார்கள் உலக விஷயங்களில் ஈடுபட்டிருப்பதைத்தவிர்த்து, எப்போதும் அனுபவிக்கவல்ல பரமபதத்துக்குக் கொண்டுபோக நினைத்து, வாத்சல்ய குணத்தால் தூண்டப்பட்டு இங்கே வந்து தன்னுடைமையைத் தனதாக்கிக் கொள்ள ஆவலுடன் எதிர்பார்த்துக் கிடக்கிறான். அவன் திருக்கோலத்தில், கிடந்ததோர் கிடக்கையில், நான் அகப்பட்டு அவன் திருவடிகளில் கிடக்கிறேன். இவ்விஷயத்தைக் கண்டு அனுபவித்த பின் எப்படி அவனை மறப்பது? சொல், நெஞ்சே!

ஆனால், அந்தோ! நான் இவ்விஷயத்தை அனுபவிக்கும் பேராசையுடன் கிட்டினாலும், அளவிட்டு அனுபவிக்கமுடியாத விஷயமாதலாலே, முழுமையாக அனுபவிக்க முடியாதவனா யிருக்கிறேன். இப்படி எந்த நிலையிலும் சிறப்பில்லாத ஏழையாகி விட்டேனே! என் கர்மவினையாலே இதுவரை தளர்ச்சி அடைந்திருந்தேன்; இப்போதோ இந்த பகவத் விஷயத்தின் சிறப்பால் தளர்ச்சியடைந்திருக்கிறேனே!

**வெள்ளநீர்பரந்துபாயும் விரிபொழிலரங்கந்தன்னுற்*
கள்வனார்கிடந்தவாறும் கமலநன்முகமும்கண்டும்*
உள்ளமேவலியையபோலும் ஒருவனென்றுணரமாட்டாய்
கள்ளமேகாதல்செய்து உன்கள்ளத்தேகழிக்கின்றாயே. (24)**

<u>நேர்மையுள்ள நேசம்</u>

நெஞ்சே! பகவத் விஷயத்தின் சிறப்பைப் பார்க்கும்போது, என் அன்பு அச்சிறப்புக்குத் தக்கதாயில்லாமல், மிகவும் அற்பமாய் உள்ளதே! பைத்தியம் பிடித்தவனுக்கு ஒவ்வொரு சமயம் தெளிவு பிறப்பதுபோல், நம்பத்தகாததாய் இருக்கிறதே! ஒருவேளை அவனிடம் நேர்மையான காதல் கொள்ளாமல், கள்ளமான காதல் செய்து நடிக்கின்றேனோ?

பரமபதத்தில் எம்பெருமான் கள்ளமில்லாத நித்யசூரிகளோடு நேர்மையாக உறவாடுகிறார். ஆனால், திருவரங்கத்திலே, கள்ள நெஞ்சுள்ள சம்சாரிகளைத் தன்வசப்படுத்த கள்வனாயிருந்து உறவாடினால்தான் முடியும் என்று திருவுள்ளம் கொண்டு, கோயிலிலே கள்வனானார்; சம்சாரிகளின் அபராதங்களைக் காணாக்கண்ணிட்டு கண் வளர்ந்தருளுகிறார்.

என்னை வசப்படுத்தியது, அரங்கனின் எளிமை முதலான ஆத்ம குணங்களல்ல; திருக்கண்கள் முதலான அவயவங்களின் அழகான ரூபங்களுமல்ல. ‘‘கிடந்ததோர் கிடக்கை’’ எனும் சமுதாய ஸோபையான கிடையழகே.

நெஞ்சே! திருவரங்கனின் இந்த அழகைக் கண்டும் ஒருவிகாரமும் ஏற்படாமல் இருக்கிறாயே! உன் வலிமையை என்னவென்று சொல்வது?

நெஞ்சே! அவன் ஒப்பற்றவன் என்று உணரவில்லையே!

நெஞ்சே! நீ அநாதிகாலமாய் மற்ற விஷயங்களில் கள்ளக்காதல்

செய்வதுபோல்தானே, இந்த விஷயத்திலும் உண்மையற்ற காதல் செய்கிறாய்? சொல்.

நெஞ்சே! பலப்பல ஆண்டுகளாக கள்ளக்காதல் செய்வதே உன் இயல்பாகிவிட்டது ஆகவேதான், இப்போது அரங்கனிடமும் மெய்யன்பு செய்யவில்லையோ? ஏனைய அற்ப விஷயங்களைப் போல இந்த பகவத்விஷயத்தையும் நினைத்தாயோ? உன் காதல் இவ்விஷயத்திற்குத் தக்கபடி முழுமையாக, உண்மையாக, நேர்மையாக இல்லையே! பகவத் விஷயத்திலே பொய்யான அன்புகொண்டு காலம் கழிக்கின்றாயே! நான் என்ன செய்ய?

**குளித்துமூன்றனலையோம்பும் குறிகொளந்தண்மைதன்னை***
**ஒளித்திட்டேனென்கணில்லை நின்கணும்பத்தனல்லேன்***
**களிப்பதென்கொண்டுநம்பீ கடல்வண்ணாகதறுகின்றேன்***
**அளித்தெனக்கருள்செய்கண்டாய் அரங்கமாநகருளானே. (25)**

<u>எம்பெருமானுடன் உரையாடல்:</u>

<u>ஆழ்வார்:</u> அரங்கா! நீ எனக்குப் பல பேருபகாரங்களை எந்தகாரணமுமின்றி (நிர்ஹேதுகமாய்) செய்தாய்! ஆனால் எனக்கு உன் மீது அன்பு பகவத் விஷயத்துக்குத்தக்கதாய் முழுமையாக இல்லை. கள்ளத்தனமான அன்போ என அஞ்சுகிறேன். இந்த பகவத் விஷயத்தை, இந்த உடலோடு எனக்குள்ள தொடர்பு நீங்கி, பரமபதம் சென்று நித்ய அனுபவம் பண்ண என் கையில் ஒரு சாதனமுமில்லை. இந்த பகவத் விஷயத்தை இழந்து விடுவோமோ என்று தோன்றுகிறது.

<u>பகவான்:</u> ஆழ்வாரே! ஏன் வருந்துகிறீர்? கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் என்று ஏதாவது செய்யலாமே! அல்லது, எல்லோரும் எளிதில் கடைப்பிடிக்கவல்ல சரணாகதி, திருநாமசங் கீர்த்தனம் முதலிய சாதனங்கள் இருக்கின்றனவே!

ஆழ்வார்: ஸ்வாமி! நீர் சொல்லும் உபாயங்கள் எதையும் அனுஷ்டிக்கத்தகுதி என்னிடம் எதுவுமில்லை. கைமுதல் ஒன்றுமில்லாதவன் நான். ப்ராஹ்மண, க்ஷத்திரிய, வைசியர் அனைவரும் அனுஷ்டிக்கத்தக்க கர்ம, ஞான, பக்திகள் எதுவும் என்னிடமில்லை. ப்ராஹ்மணனாகப் பிறந்தவன் ஒரு நாளைக்கு மூன்று காலங்கள் குளிக்கவேண்டும். மூன்றுவிதமான அக்னிகளை ஆராதிக்கவேண்டும். சந்தியாவந்தனம் முதலிய நித்ய அனுஷ்டானங்களைச் செய்யவேண்டும். இதில் ஒன்றையும் நான் அனுஷ்டிக்கவில்லையே! ப்ராஹ்மணத்தன்மை என் ஒருவனிடம் இல்லாமலிருக்கும் தாழ்வோடு போகாமல், ப்ராஹ்மணவர்க்கமே தாழ்ந்தது என்று அனைவரும் நினைக்கும்படி நான் வாழ்ந்துவிட்டேன்!

மேலும், என்னைப்பற்றிய உண்மை அறிவே எனக்கு இல்லை. ஞானயோகத்துக்குத் தகுதியை விளைக்கும் ஆத்மாவைப்பற்றிய அறிவே இல்லாதபோது, ஞானயோகமும் என்னிடமில்லை.

கர்ம, ஞான யோகங்கள் இல்லாததால், பக்தியோகமும் இல்லை. எனக்கு உன்னிடம் அணுவளவும் அன்பு இல்லையே!

நான் என்னிடம் எந்த தகுதியைப்பார்த்து உகப்பது? அரங்கா! நீர் குறையொன்றுமில்லாத கோவிந்தன். நான் உன் வடிவழகில் மயங்கியவன். உன் நிர்ஹேதுக கருணைக்கு என்னை இலக்காக்கவேணும். கைமுதல் இல்லாத என்னைப்போன்றவரை ரட்சிக்கத்தானே இங்கு பள்ளிகொண்டீர்?

**போதெல்லாம்போதுகொண்டு உன்பொன்னடிபுனையமாட்டேன்***
**தீதிலாமொழிகள்கொண்டு உன்திருக்குணம்செப்பமாட்டேன்***
**காதலால்நெஞ்சமன்பு கலந்திலேனதுதன்னாலே***
**ஏதிலேனரங்கர்க்கெல்லே என்செய்வான்தோன்றினேனே. (26)**

## உன்னிடம் அன்புகாட்டவில்லையே!

**பகவான்:** கர்ம, ஞான, பக்தியோகங்கள் உமக்கு செய்யத்தகுதி இல்லையானாலும், எனக்கு அர்ச்சனம், துதி முதலியன செய்யலாமே!

**ஆழ்வார்:** அவைகளுக்கு என்னிடம் தகுதியில்லையே! அழகிய புதுப்புதுப் பூக்களைக் கொண்டு எப்போதும் பொன்போன்ற உன் திருவடிகளை அலங்கரிப்பதில் எனக்கு ஊக்கமும் இல்லை, சக்தியுமில்லை. தேவரீரின் திருவடிகளையே அர்ச்சிப்பதற்கு ஏற்பட்ட கைகளைக்கொண்டு எப்போதும் தீங்கே விளைவிக்கும் தகாத விஷயங்களையே செய்தேன். என் வாயால் உன் கல்யாண குணங்களைப் பேச இயலாதவனாக இருந்துவிட்டேன்.

உன்னைத்துதிக்கவே ஏற்பட்ட என் நாக்கு ஏனோ உன் விஷயத்தில் புரளவே மாட்டேன் என்கிறது. உன் விஷயத்தில் காதலால் வரும் அன்பு இதுவரை என் நெஞ்சில் ஏற்பட்டதேயில்லை. மனம், வாக்கு, காயம் (உடல்) எனும் முக்கரணங்களாலும் உன்னிடம் ஈடுபட்டிருக்கும் பெரியோர்கள் அடையும் பயனை அடைவதற்கு, அவற்றில் ஒன்றிலாவது ஈடுபாடு வேண்டியிருக்க, ஒன்று கூட எனக்கு இல்லாமையாலே அடியேன் எதுவுமில்லாமல் இருக்கிறேன்.

அரங்கனாகிய தேவரீரை என் ஒரு அவயவத்தாலும் அனுபவிக்கப்பெற்றிலேன் ஸ்வாமி! தேவரீர் எல்லா உயிர்களுக்கும் நண்பனாகவும், அடியார்கள் விஷயத்தில் முக்கரணங்களும் ஒருபடிப்பட்டிருக்கிற நேர்மையுடையவராகவும் இருப்பதைச் சாஸ்திரங்களில் கேட்டு, இப்போது நேரிலும் காணலாம்படி, திருவரங்கத்தில் பள்ளிகொண்டிருக்கும் உம் விஷயத்தில் நான் ஒரு கரணத்தால் கூட ஈடுபடாமல் ஒன்றுமில்லாதவனாக ஆகிவிட்டேனே! அந்தோ! என் பாபத்தாலே உம்மை இழந்தேனே! தேவரீருக்குப் பயன்படுத்தவேண்டிய கை, கால்களைப் பயன்படுத்தாமல் போன நான் ஏன் பிறந்தேன்?

குரங்குகள்மலையைநூக்கக் குளித்துத்தாம்புரண்டிட்டோடி*
தரங்கநீரடைக்கலுற்ற சலமிலாவணிலும்போலேன்*
மரங்கள்போல்வலியநெஞ்சம் வஞ்சனேன்நெஞ்சுதன்னால்*
அரங்கனார்க்காட்செய்யாதே அளியத்தேனயர்க்கின்றேனே. (27)

## மரம்போலே வலியது என் நெஞ்சம்

**பகவான்:** ஆழ்வாரே! மனிதர்கள் செய்யக்கூடிய எந்த நற்செயல்களும் நீர் செய்யவில்லை யென்றாலும், இராமாவதாரத்தில், குரங்குகளும், அணில்களும் நல்ல நெஞ்சத்துடன் தங்கள் சக்திகேற்றவாறு சில தொண்டுகள் செய்தனவே! அதுபோல் ஏதாவது நீரும் செய்திருந்தாலும் போதுமே!

**ஆழ்வார்:** நான் எதுவும் செய்ததில்லை. இராமாயணத்தில் இராம கைங்கர்யம் செய்யவேணும் என்ற ஆசையில் குரங்குகள் மலைகளைத் தூக்கி வந்து கடலில் போட்டு அணைகட்ட உதவின. இதைப்பார்த்த அணில்களும், தாங்களும் ஏதாவது கைங்கர்யம் செய்யவேணும் என்ற ஆசையில், கடலில் குளித்து, மணலில் புரண்டு மணலை உடலில் ஒட்டிக்கொண்டு, அதை உதறி அணையில் சேர்த்தன. ஆனால் நானோ மனிதர்களைப்போல சாஸ்திரத்திற்கு வசப்பட்ட பிறவியாகவும் இல்லாமல், வர்ணாஸ்ரம நியமங்களும் இல்லாமல், கை கால்கள் கூட இல்லாமல் மிகத்தாழ்ந்த ஜந்துக்கள் பகவத் கைங்கர்யம் செய்ய குளிப்பது, ஓடுவது, புரள்வது ஆகிய செயல்கள் மூலம் காட்டுகிற நல்லெண்ணம் கூட சிறிதுமில்லாமல் இருந்துவிட்டேன். பயன் கருதாது, ஓர் நிலை நின்று கைங்கர்யம் செய்த அணிலுக்குள்ள ஈடுபாடும் எனக்கில்லையே! மரங்களைப்போல் கடினமான மனசை உடையவனாய் வஞ்சனையில் ஈடுபட்டவனாய் கிடந்தேனே!

எல்லாவித கைங்கர்யங்களுக்கும் தகுதி வாய்ந்த இந்த ஆத்மா, இளையபெருமாள் இலட்சுமணனைப்போல் 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை' செய்யப்பிறந்த இந்த ஆத்மா இப்படி வீணாகிவிட்டதே! எம்பெருமானை மறந்து இப்படி அனர்த்தப்படுகிறேனே! அரங்கா!

**உம்பராலறியலாகா ஒளியுளாரானைக்காகி***
**செம்புலாலுண்டுவாழும் முதலைமேல்சீறிவந்தார்***
**நம்பரமாயதுண்டே நாய்களோம்சிறுமையோரா***
**எம்பிராற்காட்செய்யாதே யென்செய்வான்தோன்றினேனே.** (28)

<u>**உனக்கு அடிமை செய்யவில்லையே!**</u>

<u>பகவான்:</u> அணில்கள் கை, கால்களற்ற விலங்குகளாயிருந்தும் நமக்குக்கைங்கர்யம் செய்தன. அந்த நல்லெண்ணம் உமக்கு இல்லையானாலும், கஜேந்திராழ்வான் பொய்கையிலே காலை வைத்து, முதலையாலே பிடிக்கப்பட்டு தளர்வுற்றபோது, நம்மையே ரட்சகனாக நினைத்ததுண்டு; அந்த நினைவாவது உம்மிடம் உண்டோ?

<u>**ஆழ்வார்:**</u> அந்த நினைவும் என்னிடம் இல்லையே! திருவரங்கா! விலங்கினத்தைச் சேர்ந்த ஒரு யானையைக்காக்க அரைகுலைய, நிலைகுலைய பதறிக்கொண்டு வந்து உதவி செய்தாயே! உன் மேன்மையையும் பாராமல், அடியவரின் சிறுமையையும் பாராமல், உடனே உதவிட எப்படி ஓடோடி வந்தாய்! உனக்கும், திருமால் அடியவனுக்கும் இருந்த பிரிக்கமுடியாத உறவுதானே காரணம்? மிகவும் தாழ்ந்த ஒரு நீர்ப்புழுவான முதலைமேல் சீறிக்கொண்டு பாய்ந்தாயே, உன் கோபத்துக்குக் காரணம் நீ அடியார் விஷயத்தில் அபசாரம் செய்பவரை விடமாட்டாய் என்பதே. அடியார்களைக் காக்கும் பொறுப்பையேற்றுக்கொண்டு உடனுக்குடன் அவர்களைக் காக்க நீ தவறுவதேயில்லை. தாழ்ந்த

எங்களைப் போன்றவரின் குற்றங்களைப் பாராமல், எங்கள் குணங்களை ஆயிரம் மடங்காகக்கண்டு எங்களுக்கு எப்போதும் உதவத் தயாராகயிருக்கும் வாத்சல்யன் நீ! எனினும் உம் நினைவு கூட இல்லாமல் பயனற்ற பிறப்பை உடையவன் ஆகிவிட்டேனே நான்!

**ஊரிலேன்காணியில்லை உறவுமற்றொருவரில்லை***
**பாரில்நின்பாதமூலம் பற்றிலேன்பரமமூர்த்தி***
**காரொளிவண்ணனே கண்ணனேகதறுகின்றேன்***
**ஆருளர்களைகணம்மா அரங்கமாநகருளானே.** (29)

**<u>கண்ணனே கதறுகின்றேன்</u>**

<u>பகவான்:</u> ஸ்ரீ ஸாளக்கிராமம், திருவயோத்தி, திருவரங்கம் போன்ற திவ்ய தேசங்களில் நீர் பிறந்திருந்தால் அது காரணமாக உம்மை நான் ரட்சிப்பேன். அந்தத்தகுதியாவது உம்மிடம் உள்ளதா?

<u>ஆழ்வார்:</u> எந்த திவ்யத்தலத்திலும் நான் பிறக்கவில்லை! தேவரீர் நித்யவாஸம் பண்ணும் திருத்தலங்களில் எங்கும் நான் பிறக்கவில்லையே!

கோவில்களில் திருப்பல்லாண்டு பாடுவது, திருநந்தவனம் ஏற்படுத்தி புஷ்பகைங்கர்யம் செய்தல், தானத்தாலோ, விக்கிரயத்தாலோ அவ்வூரில் சில காணியாட்சிகளைப்பெறல் முதலிய தொடர்புகள் எதுவும் என்னிடமில்லை.

ஒரு திவ்யதேசத்தில் உள்ளவரோடு கொள்வன, கொடுப்பன முதலானவற்றால் வரும் தொடர்போ, அங்கே மந்திரம் சொன்னதாலோ, பெற்றெடுத்த மக்களைக் கொடுத்ததாலோ, கொண்டதாலோ உண்டான தொடர்போ எதுவும் எனக்கில்லை. முகம் பார்த்துப்பேசி, பழகியிருக்கும் எட்டின உறவினரோ, நண்பரோ கூட யாரும் எனக்கு திவ்யதேசத்தில் இல்லையே! ஆதலால், எவ்வகையிலும் வேறு கதியற்றவர்க்குக் கதியாயிருக்கும் தேவரீர் திருவடிகளோடு எனக்கு எவ்வித தொடர்புமில்லாமல் போயிற்றே!

ஆனால், என்னிடம் என்னை ரட்சித்துக்கொள்ள உபாயம் ஒன்றுமே இல்லை என்றேனே தவிர, என்னை ரட்சிக்க உறுப்பாக உம்மிடம் ஒன்றுமில்லை என்று சொல்லவில்லை. அனைவரிலும் உயர்ந்தவராய், அனைவருக்கும் ஸ்வாமியாய் இருக்கிறவரல்லரோ தேவரீர்? உம் அடியனான என்னை ரட்சித்தாலல்லவோ நீர் அனைவருக்கும் ஸ்வாமியான பரமமூர்த்தியாகலாம்.

"ஆதரம் பெருகவைத்த அழகன்" என்பதாலே, முதன்முதலில் ஒரு சேதனனுக்கு உம்விஷயத்தில் ஆர்வத்தை உண்டாக்குவதால், ஆர்வம் தெளிந்தபின்பு உபாயமாய் ஆவதும் அன்றோ உம் வடிவழகு இருக்கிறது? அது உம்மிடம் இருக்கும்போது, எனக்குக் கைங்கர்ய ஸித்தி ஏற்படக் குறையில்லை. எளிமை, நீர்மை முதலிய குணங்களுடன் தேவரீரிருக்கும்போது எனக்கு என்ன குறை? தேவரீரின் இந்தப்பெருமைகளை எண்ணி உம்மை கதறிக் கூப்பிடுகின்றேன். ஸ்வாமி! தேவரீர் தவிர ரட்சகன் வேறு யார் எனக்கு இருக்கிறார்? கைமுதல் இல்லாத நான் என்னையே ரட்சித்துக் கொள்ளமுடியுமா?

**மனத்திலோர்தூய்மையில்லை வாயிலோரின்சொலில்லை***
**சினத்தினால்செற்றம்நோக்கித் தீவிளிவிளிவன்வாளா***
**புனத்துழாய்மாலையானே பொன்னிசூழ்திருவரங்கா***
**எனக்கினிகதியென்சொல்லாய் என்னையாளுர டையகோவே.(30)**

<u>**இல்லாத தீமை என்னிடம் எதுவும் இல்லையே!**</u>

<u>**பகவான்:**</u> உம்மிடம் எந்த நன்மையுமில்லை என்றீர்! நன்மையேயில்லையானாலும், உம்மிடம் தீமை எதுவுமில்லை யானால் அதையே காரணமாகக்கொண்டு உம்மை ஏற்றுக்கொண்டு, நீர் விரும்பும் பேறுகளைக் கொடுக்கிறோம்.

<u>**ஆழ்வார்:**</u> என்னிடம் நன்மைகள் எதுவுமில்லாததுபோல், தீமைகள் என்னிடம் இல்லாதது உலகில் எதுவுமில்லை. என் மனதில்

தூய்மையேயில்லை. காமம், கோபம் முதலியவையற்ற தெளிவு சிறிதுமில்லை. நான் என் வாயால் ஒரு பிரியமான வார்த்தையும் சொல்வதில்லை. என் கோபத்தாலே விரோதம் தோற்றப்பார்த்து, எரிக்கும் பார்வையிலேயே எதிரியானவன் சுருண்டு விழும்படி செய்வேன்.

நான் வாய்திறந்து பேசினாலோ, கேட்டவர்களுக்கு நெருப்பு வாரிக்கொட்டினாற்போல் அவர்கள் அடியோடு அழியும்படி இருக்கும் என் வார்த்தை. நான் பிறர் துன்புறுவதையே என் மகிழ்ச்சியாகக் கொண்டு, அதுவே எனக்குப் பயனாக நினைத்திருப்பேன். பிறர் பெருமை பொறாதவன் நான்.

அரங்கா! இதுவரை சொல்லப்பட்ட எல்லா தாழ்வுகளும் நிறைந்திருக்கும் எனக்கு, என் தாழ்வைக் கருதி நானே என்னை ரட்சித்துக்கொள்ளமுடியாமல், உம்மிடம் என்னை ரட்சிக்கும் பொறுப்பை ஒப்படைத்துவிட்டேன்.

நான் உய்ய நீரே வழி சொல்வீராக! நான் அடிமையாயிருப்பதும், நீர் ஸ்வாமியாய் இருப்பதும் எப்போதும் நிலையாயிருக்கும் தன்மைகள் அன்றோ? ஆகையால், என்னை ரட்சிப்பதற்கு வேறு யார் தகுதி பெற்றவர்? என் ஆத்மா தாழ்வுற்றால் அதனால் வரும் குறை உம்முடையதன்றோ?

**தவத்துளார்தம்மிலல்லேன் தனம்படைத்தாரிலல்லேன்***
**உவர்த்தநீர்போல என்றனுற்றவர்க்கொன்றுமல்லேன்***
**துவர்த்தசெவ்வாயினார்க்கே துவக்கறத்துரிசனானேன்***
**அவத்தமேபிறவிதந்தாய் அரங்கமாநகருளானே. (31)**

**<u>பிறவியே வீணானதே!</u>**

**பகவான்:** எம்மை வந்தடைய உபாயம் எதுவுமே செய்யவில்லை என்றீர்! மோட்சம் என்ற உயர்ந்தகதி இல்லையானாலும், குறைந்தபட்சம் சுவர்க்கம்பெற யாகங்கள், தவங்கள் ஏதாவது செய்தீரோ?

__ஆழ்வார்:__ ஒன்றுமே செய்யவில்லை. சிற்றின்ப விஷயங்களில் ஈடுபட்டதாலே என் உறவினர்க்கும் ஆகாதவனாகிவிட்டேன். தவம் செய்யும் மகான்களிடமும் நான் சேரவில்லை. ததீயாராதனம் போன்ற நல்ல விஷயங்கள் செய்ய பணம் சம்பாதிக்கவுமில்லை; அப்படி பகவத், பாகவதருக்குச் செலவழிக்க சம்பாதித்தவருடன் சேரவுமில்லை. இப்படி தவமும், ஸாத்வீக தானமும் செய்யாமலிருந்தாலும், ''பிரதி உபகாரத்தையாவது, பலனையாவது எதிர்பார்த்து, அமங்களமான யாதொரு திரவியம் கொடுக்கப் படுகிறதோ அது ராஜஸ தானம்'', ''தோஷமுள்ள தேஸ காலங்களிலும், கௌரவமில்லாமலும், அவமதிப்புடனும், அஸத் பாத்திரங்களுக்கு எது கொடுக்கப்படுகிறதோ, அது தாமஸதானம்'' என்கிறபடி, ராஜஸ, தாமஸ தானம் செய்யவோ, ''கொடையாளி'' என்ற புகழ்பெற தானம் செய்வதற்காகவோ பணம் படைத்தவர் கூட்டத்திலும் நான் சேரவில்லை.

உப்பு நீரை முகத்தில் அடித்துக்கொண்டால், கண் விழிக்க முடியாதபடி கரிப்பது போலே, என்னை நேருக்குநேர் முகம் பார்க்கமுடியாதபடி நான் உறவினர்களிடத்தில் குற்றமே உருவானவனாய் வாழ்ந்தேன். இப்படி எல்லா உறவினரையும் துறந்து, நெஞ்சிலே தீய குணங்களை மறைத்து வசப்படுத்தும் பெண்களுடன் உறவாடி, பின்னர் அந்த உறவும் அறுந்து போகும்படி அவர்களுக்கும் கள்ளனாகினேன். இப்படியெல்லாம் ஆன பின்பு, தேவரீர் எனக்கு அளித்த பிறவி வீணானதே என்று தெரிந்து கொண்டேன்.

சாஸ்திரங்களாலே திருத்தமுடியாதபடி, கர்மங்கள் தூண்டிய வழியே சென்று, மற்ற விஷயங்களில் மண்டியிருப்பாரை, தன் அழகையும், குணத்தையும் காட்டித் திருத்துவதற்காக நீர் திருவரங்கத்தில் ஸயனித்திருப்பது என் விஷயத்தில் பலிக்கவில்லையே, ஸ்வாமி!

**ஆர்வத்துவண்டலம்பும்சோலை அணிதிருவரங்கந்தன்னுள்***
**கார்த்திரளனையமேனிக் கண்ணனேயுன்னைக்காணும்***
**மார்க்கமொன்றறியமாட்டா மனிசரில்துரிசனாய***
**மூர்க்கனேன்வந்துநின்றேன் மூர்க்கனேன்மூர்க்கனேனே. (32)**

**<u>மூர்க்கனேன் மூர்க்கனேனே - என்னே என் மூர்க்கத்தனம்!</u>**

<u>பகவான்:</u> உமக்கு எந்தத்தகுதியுமில்லை என்கிறீர். பின் ஏன் என்னிடம் வந்தீர்?

<u>ஆழ்வார்:</u> தோன்றியபடியெல்லாம் செய்யும் மூர்க்கனான நான் செய்யும் காரியங்களுக்கு ஒரு காரண, கார்யங்களை ஆராய முடியுமோ? நான் மூர்க்கனாகையாலே வந்தேன்.

கார்மேகத்தையொத்த திருமேனியை உடையனாய், வடிவில் கருமை நிறத்தாலும், குளிர்ச்சியாலும், கைம்மாறு கருதாமல் பிறருக்கு நிர்ஹேதுகமாக உதவும் தன்மையாலும், தனக்கென்று ஒன்றும் வைத்துக்கொள்ளாமல் எல்லாவற்றையும் பிறர்க்கு வழங்குகையாலும், மேகத்தை ஓரளவுக்கு உபமானமாகச் சொல்லும்படி வடிவுகொண்ட பெரியபெருமாள் எனப்படும் திருவரங்கா!

நீ யசோதைப்பிராட்டி சேமித்துவைத்த வெண்ணையைத் திருடி உண்டு பட்டிமேயும் காரேறு போலே திரிந்து வளர்ந்த மதிப்பெல்லாம் தோற்றியிருக்கும் கண்ணனே அன்றோ? என்னைப்பெற உறுப்பாக, நீ பகவத்கீதையில் உபதேசித்த வழிகளாகிற கர்ம, ஞான, பக்தியோகங்கள், அவதாரரஹஸ்ய ஞானம், புருஷோத்தம வித்யை, தவிர மற்ற சாஸ்திரங்களில் மோட்ச சாதனங்களாகச் சொல்லப்பட்ட திருநாம ஸங்கீர்த்தனம், புண்யக்ஷேத்ரவாஸம் என்று பலப்பல வழிகள் பக்தர்களின் ருசிக்குத்தக்கபடி கணக்கற்றவை. ஆனால், பகுத்தறிவு கொண்ட நானோ எதையும் அனுஷ்டிக்கவில்லை. நான் கள்ளன், வஞ்சகன், என்னோடு ஒப்பிட்டால், மற்றவர்களெல்லாம்

மிக உயர்ந்தவர்கள். இப்படிப்பட்ட என் தாழ்வை அறியாத அறிவிலியாகிய நான், பிடித்தபிடியை விடமாட்டாத மூர்க்கனான நான், உன் சந்நிதியிலே வந்து நின்றேன், என் அறியாமையாலே! என்னே என்னுடைய மூர்க்கத்தனம்!

**மெய்யெல்லாம் போகவிட்டு விரிகுழலாரில்பட்டு***
**பொய்யெல்லாம் பொதிந்து கொண்ட போட்கனேன் வந்து நின்றேன்***
**ஐயனே! அரங்கனே! உன்னருளென்னுமாசைதன்னால்***
**பொய்யனேன் வந்து நின்றேன் பொய்யனேன் பொய்யனேனே. (33)**

<u>பொய்யனேன் பொய்யனேனே!</u>

<u>பகவான்:</u> நீர் உம்மை 'மூர்க்கனேன்' என்றீர். அந்தச்சொல் மனப்பூர்வமாகச் சொல்லப்பட்டதா?

<u>ஆழ்வார்:</u> அதுவும் பொய்யே!

<u>பகவான்:</u> பின் எப்படித்தான் உம்மைக் கடைத்தேற்றுவது?

<u>ஆழ்வார்:</u> தேவரீர் திருவடிகளோடு எனக்கு உண்டான உறவும், தேவரீருடைய நிர்ஹேதுக கிருபையும் தவிர வேறு உபாயம் உண்டோ?

மெய்யான நினைவு, மெய்யான சொல், மெய்யான செயல் ஆகிய அனைத்தையும் அடியோடு போகவிட்டேன். அரங்கா! தேவரீர் திருமுன்பன்றோ பொய் பேசினேன்!

பெண்கள் வலையிலகப்பட்டு மீள முடியாமல் தவித்தேன். ஆகவே, மெய் பேசுவது போய்விட்டது. மெய்யை அடியோடு விட்டது போல, பொய்களை ஒன்றுவிடாமல் சேர்த்து வைத்துக்கொண்டேன். வேறு போக்கிடமற்ற, கதியற்ற நிலையில் நான் இப்போது உன்னிடம் வந்தேன். உனக்கும், எனக்கும் அழிக்கமுடியாத இயற்கையான உறவு உள்ளதால் உன்னிடம் வந்தேன்.

திருவரங்கத்திலே தேவரீர் வந்து கண்வளர்ந்தருளினபடியைக் கண்டு இங்கு வந்தேன். பரமபதத்தில் நித்யசூரிகள் மத்தியில் உயர்ந்த வாழ்ச்சியைவிட்டு, சம்சாரிகள் எல்லோரும் உஜ்ஜீவிக்க வேண்டும் என்பதையே பெரும்பயனாகக்கருதி, ''சம்சாரத்தைப் பூண்டோடு அழிக்காமல் எழுந்திருக்கமாட்டேன்'' என்று திடமாக சங்கல்பித்துக் கொண்டதை நீர் இங்கே ''கிடந்ததோர் கிடக்கை''யாகக் கிடக்கும் இந்தச் சயனக்கோலம் வெளிப்படையாகக் காட்டுகிறதே! நீர் எனக்கு அருள்வீர் என்ற நம்பிக்கையுடன் உம்கருணையைப் பெறவேணும் எனும் ஆசையுடன் வந்தேன்!

<u>பகவான்:</u> இப்போது நீர் சொல்வதாவது மெய்யா?

<u>**ஆழ்வார்:**</u> ஆராய்ந்து பார்க்கும்போது, இதுவும் பொய்தான். சாஸ்திரங்கள் இப்படிச் சொன்னால் பயனுண்டு என்று சொன்னதால் சொன்னேன். என் தாழ்வு என் நெஞ்சில் உறைத்து நான் சொல்லவில்லை. எல்லாம் அறிந்தவரான நீரும் என் பொய்யை மெய்யென்று நம்பும்படியல்லவா பேசினேன்! நான் பொய்யனேன்! பொய்யனேன்!

**உள்ளத்தேயுறையும்மாலை உள்ளுவானுணர்வொன்றில்லா***
**கள்ளத்தேன்நானும்தொண்டாய்த் தொண்டுக்கேகோலம்பூண்டு***
**உள்ளுவாருள்ளிற்றெல்லாம் உடனிருந்தறிதியென்று***
**வெள்கிப்போயென்னுள்ளேநான் விலவறச்சிரித்திட்டேனே. (34)**

<u>**விலவறச்சிரித்திட்டேனே**</u>

<u>**நெஞ்சே!**</u> எண்ணங்களின் ஊற்று புறப்படும் நெஞ்சுக்குள் எப்போதும் வசிப்பவனாய், அதனால் நம் குற்றங்களை நன்கு அறியும் ஸர்வக்ஞனான (எல்லாம் அறியவல்லவனான) எம்பெருமானை நான் ஒரு பொய்யனாக அணுகி, அவனுக்கும் தோஷத்தை விளைத்து என்ன காரியம் செய்துவிட்டேன்? இப்படி எம்பெருமானுக்குக் குற்றம் விளைவிப்பதைக் காட்டிலும், நம்

குற்றங்களை அறியாத நம்மைச்சுற்றி வாழும் சம்சாரிகளுடன் கூடியிருந்து அழிந்து போவதே நல்லது. ஆகவே,

**பெரியபெருமாளே!** உன் திருவடிகளைவிட்டு அகலுகின்றேன்!

**நெஞ்சே!** நெஞ்சிலேயே உறையும் எம்பெருமானை ஏமாற்ற முடியுமோ? எனக்குள்ளே அவன் அந்தர்யாமியாக வாழ்கிறான் என்கிற அறிவு எனக்கு இல்லை. கள்வனாகிய நானும் அறிவற்றவன். என்னை, உலகினர் அறியாதபடி வெளி வேஷத்தாலே மறைத்துப்போந்த கள்ளனானேன். நல்லவர்கள் செய்யவேண்டிய பகவத் கைங்கர்யத்தை நானா செய்வது?

**அரங்கனே!** உன் விஷயத்தில் கள்ளத்தனம் செய்ததோடு நில்லாமல், ஸத்வ குணமுடைய நல்லோர்கள் அனைவரும் என்னைத் தலையாலே வணங்கிக் கொண்டாடும்படி வேஷங்களையும், பெயர்களையும் வைத்திருக்கிறேன். எண்ணங்கள் ஊற்றுப்போலே புறப்படும் நெஞ்சிலேயே நீ இருக்கும்போதன்றோ, நான் அம்மணக் கூத்து போன்ற இந்தத்தகாத காரியங்களைச் செய்தேன்!

என் கள்ளத்தனத்தையும், நீ எல்லாம் அறிந்தவன் என்பதையும், நீ எப்போதும் என் நெஞ்சிலே இருப்பவன் என்பதையும் எண்ணிப்பார்க்கும்போது நான் வெட்கமடைந்தேன். ஆகவே பெரியபெருமாளாகிய உன்முன் நிற்கமுடியாமல் உன்னைவிட்டு விலகிப்போனேன். விலகிப்போய், எனக்குள்ளேயே என் விலா எலும்புகள் முறியும்படி சிரித்தேன். நான் செய்த கார்யங்களின் தாழ்வை எண்ணி, முடிவில்லாமல் என்னுள் சிரித்தேன்.

வெட்கக்கேடான என் கபட வேஷ நிலையை உணர்ந்து, முடிவில்லாமல் எனக்குள் சிரித்துக்கொண்டேன்!

தாவியன்றுலகமெல்லாம் தலைவிளாக்கொண்டவெந்தாய்*
சேவியேனுன்னையல்லால் சிக்கெனச்செங்கண்மாலே*
ஆவியேயமுதே யென்றனாருயிரனையவெந்தாய்*
பாவியேனுன்னையல்லால் பாவியேன்பாவியேனே. (35)

பாவியேன் பாவியேனே!

பகவான்: ஆழ்வீர்! உம்மை இழந்துவிடுவோமோ என்று வருந்துகிறேன். நீர் எம்மைவிட்டு விலக வேண்டிய காரணமென்ன?

ஆழ்வார்: எல்லாமறிந்த தேவரீர் முன்பு பொய்களைச் சொல்வதைவிட, என் நெஞ்சை அறியாத சம்சாரிகளுடன் கூடியிருக்கப்போகிறேன்.

பகவான்: நீர் நம்மை அணுகியது நல்லதே! நாம் அடியார்கள் குற்றத்தைக் காணமாட்டோம். குணங்களை ஒன்று விடாமல் காண்போம். ஆகவே, உம்மிடம் எத்தனை குற்றங்களிருப்பினும் நீர் எம்மிடம் வருவதே தக்கது.

ஆழ்வார்: இது வெறும் பேச்சுதானோ? இதை ஸ்வாமி எப்போதாவது அனுஷ்டித்துக் காட்டியதுண்டோ?

பகவான்: நாம் திருவிக்ரமனாய் புலனடக்கமுள்ள பிராமணருடனும், சண்டாளருடனும் வேறுபாடின்றி எல்லார் தலையிலும் திருவடி வைத்து நமக்கு ஆகாதார் யாருமில்லை யென்று காட்டியுள்ளோமே! உம்மைப் பிரிந்தால் நாம் தரிக்கமாட்டோம்.

ஆழ்வார்: அரங்கா! உன் திருவிக்ரம அவதாரத்தை அறிவேன். உம்முடைய இந்த நீர்மையை அறியாமல் உம்மை விலக நினைத்தேன். இனி உம்மைவிட்டுப் பிரிந்து, மற்றொரு பொருளைப் பற்ற மாட்டேன். உம்மைவிட்டால் எனக்கு நானே ராஜாவாக, ஸ்வதந்திரனாக இருக்கவேணும் அல்லது பிறர்க்கு அடிமையாக

வாழணும். இந்த இரண்டு குறைகளும் இனி எனக்கு வராது. இனி, என்றும், உனக்கே அடிமையாயிருப்பேன்! இந்த உறுதி எல்லா காலமும் நிற்கும். என் ஆத்மா உள்ளவரை இருக்கும்! அணுகத்தகாதவன் என்று உன்னைவிட்டு அகலப்பார்த்த என்னை, நான் அகன்று அழிந்துவிடாதபடி சேரவிட்டுக்கொண்ட என் ஸ்வாமியல்லவோ நீர்? இனி, உன்னைத்தவிர வேறொன்றையும் எப்போதும் நெஞ்சார நினைக்கமாட்டேன்! நான் மிக்க பாபத்தைப் பண்ணினவனே! இருப்பினும் உன்னைவிட்டுப்போகமாட்டேன்!

**மழைக்கன்றுவரைமுனேந்தும் மைந்தனேமதுரவாறே***
**உழைக்கன்றேபோலநோக்கம் உடையவர்வலையுள்பட்டு***
**உழைக்கின்றேற்கென்னைநோக்காதொழிவதே உன்னையன்றே**
**அழைக்கின்றேன்* ஆதிமூர்த்தி அரங்கமாநகருளானே. (36)**

**கூக்குரல் கேட்கவில்லையோ?**

**அரங்கமாநகருளானே!**

**கண்ணா!** அன்று கன்றுகளும், பசுக்களும், இடையர்களும் இந்திரன் பெய்த கல்மழையைக் கண்டு நடுங்கினபோது, ஏழு வயதில் நீ கோவர்த்தன மலையை ஒரு பூப்பந்து எடுத்ததுபோல் ஆயாஸமில்லாமல் தூக்கிப்பிடித்து எல்லோரையும் காத்தாயே! இனிமையே வடிவெடுத்தவனே! பரமபதம் செல்லவேணுமென்ற என் துடிப்பைப் பாராய்! நீயே என்னை ரட்சிப்பாய் என்று உன்னிடம் வந்து கூக்குரலிட்டுக் கூப்பிடுவது உன் செவியில் விழவில்லையா?

இங்கு சயனிப்பது என்னை ரட்சிக்கவல்லவாகில் வேறு என்னதான் பயன்? அவரவர் செய்த புண்ய, பாபகர்மங்களை ஒட்டி சம்சாரிகளை ரட்சிப்பதைப் பரமபதத்திலிருந்தே செய்யலாமே! திருவரங்கம் எழுந்தருளி சயனிக்கவேண்டிய அவசியமென்ன? நான் உன்னைவிட்டு அகலாது என்னை உன்னருகில் இருக்கச்செய்தாய்! எதற்காக? பரமபதம் சென்று உனக்கு நித்ய கைங்கர்யம் செய்ய எனக்கு அருளமாட்டாயா?

இந்த உலக விஷயங்களிலேயே இருந்து, இங்கேயே துன்புற்றே போய்விடுவோமோ என்று அஞ்சுகிறேன். கேட்போர் அனைவரும் நீராய் உருகும்படி பெருங்குரலெடுத்து உன்னைக் கூப்பிடுகிறேன். எனக்கு அருள்புரியாயோ?

**தெளிவிலாக்கலங்கல்நீர்சூழ் திருவரங்கத்துள்ளோங்கும்***
**ஒளியுளார்தாமேயன்றே தந்தையும்தாயுமாவார்***
**எளியதோரருளுமன்றே என்திறத்தெம்பிரானார்***
**அளியன்நம்பையலென்னார் அம்மவோகொடியவாறே. (37)**

**"இவன் நம் பையல்"**

திருவரங்கா! நீயே ஸ்ரீமந்நாராயணன்!

ஸ்ரீமந்நாராயணனே தாயாகவும், தந்தையாகவும், என்னுடன் பிறந்தவனாகவும், எனக்கு தங்குமிடமாகவும், நண்பனாகவும், மோட்சோபாயமாகவும், மோட்சத்தில் அடையப்படுபவராயுமுள்ளான் என்பதை அறிவேன்!

அரங்கா! நீயே எனக்கே உரிய என் தாயும், தந்தையும் ஆனாய்! எனக்கு வேறு யாரோ உறவு உண்டு என்று எண்ணி பேசாமல் இருக்கிறாயோ? என் விஷயத்திலே நீ பண்ணவேண்டுவது ஒரு சாதாரண குளிர்ந்த கடாட்சமேயன்றோ? என் விஷயத்தில் ஆயர்களுக்குச் செய்தது போல் மலையை எடுத்து அருஞ்செயல் செய்து ரட்சிக்க வேண்டியதில்லையே! விபீஷணாதிகளைக் காக்க வில்லெடுத்தது போல், பாண்டவாதிகளைக் காக்க கொல்லாமாக் கோலை எடுத்தது போல என்னை ரட்சிக்கவேண்டாமே! ஒரு கடைக்கண் கடாட்சம் - குளிர நோக்குதல் - இருந்தால் போதுமே!

"இவன் நாம் கருணை செய்யலாம்படியான நன்மையுடையவன்; இவன் நம்முடைய பையல்" என்று பெரியபெருமாளாகிய நீர் ஒரு வார்த்தை சொன்னாலே போதுமே! நான் பிழைத்துப் போவேனே!

அளவற்ற வருத்தத்தால் நான் எழுப்பும் கூக்குரல் கேட்டால் நீர் எழுந்திருக்கவேண்டாமோ? என் கதறல் கேட்டும் உறங்கும், உம் திருவுள்ளம் கொடிதாகிவிட்டதே! அம்மம்மா!

மேம்பொருள்போகவிட்டுமெய்ம்மையைமிகவுணர்ந்து*
ஆம்பரிசறிந்துகொண்டுஐம்புலனகத்தடக்கி*
காமபறத்தலைசிரைத்துஉன்கடைத்தலையிருந்துவாழும்*
சோம்பரையுகத்திபோலும்சூழ்புனலரங்கத்தானே. (38)

<u>வாழும் சோம்பர் விரும்பும் திருமால்</u>

முன்னுரை

மஹாபாரதத்தில் பகவத்கீதையும், அதில் சர்மஸ்லோகமும் எவ்வாறு மிக முக்கியமாக அமைந்துள்ளனவோ, அதைப்போலவே 'திருமாலை' திவ்யப்பிரபந்தத்திற்கு, இந்த 38-வது பாசுரம் உயிர்நாடியாக, அதிமுக்கியத்துவம் வாய்ந்ததாக ஏற்பட்டிருக்கிறது.

அதாவது, "மேம்பொருள்" என்று தொடங்கும் இப்பாசுரம் 'திருமாலை' சாரமாக அமைந்ததுமல்லாமல், இப்பாசுரத்துக் காகவே இத்திருமாலை முழுதும் அவதரித்தது எனலாம். இப்பாசுரத்துக்குப் பின்னால் வரும் ஏழு பாசுரங்களும், இப்பாசுரத்தின் அர்த்தத்தில் ஊறியிருப்பவர் களின் பெருமைகளைக் கூறுகின்றன.

மேலும், இப்பாசுரம் "சர்வதர்மாந்" என்று தொடங்கும் சர்மஸ்லோகத்தின் அர்த்தத்தை விளக்குவதுபோல், மந்திரரத்னமான த்வய மந்திரத்தின் பொருளையும் உரைக் கின்றது. அதுவுமன்றி, இன்னொரு பெருமையும் கவனிக்கத் தக்கது. த்வய மந்திரம் பூர்வகாண்டத்தின் (முதல் வரி) அர்த்தத்தை, நம்மாழ்வார் திருவாய்மொழியில் 'அகலகில்லேன்' (6.10.10) என்கிற பாசுரத்தில் அருளினார். ஸ்ரீ ஆண்டாள் த்வய மந்திரத்தின் உத்தரகாண்டம் (இரண்டாம் வரி) அர்த்தத்தை திருப்பாவையில் "சிற்றஞ்சிறுகாலே" என்கிற பாசுரத்தில் அருளிச்செய்துள்ளார்.

த்வய மந்திரத்தின் இரண்டு காண்டப் பொருளையும் ஒரே பாசுரத்தில் அருளிச் செய்தவர் இவ்வாழ்வார் ஒருவரே.

எல்லாப்பெருமைகளும் நிறைந்திருக்கும் மஹாத்மாவான இவ்வாழ்வாரைக் கிடைக்கப்பெற்றோமே என்று பெரிய பெருமாள் திருவுள்ளம் மிக உகந்து, தன் திருவுள்ளத் திலுள்ள ஆனந்தமெல்லாம் திருமுக மண்டலத்திலே வெளிப்படுத்தும்படி ஆழ்வாருக்கு ஸேவைசாதிக்க (முன்தோன்ற), ஆழ்வாரும், “எம்பிரானே! தேவரீரை அடைந்து தங்களைக்காக்கும் பொறுப்பை தேவரீரிடமே ஒப்படைத்து விட்டு, தாங்களே தங்களைக் காத்துக்கொள்ளும் பொறுப்பிலிருந்து ஒதுங்கியிருப்பவர் களைக் கண்டால் இப்படியா தேவரீர் திருவுள்ளம் உகந் திருப்பது?” என்று பெரிய பெருமாள் திருமுன்பே அவன் திருமுகத்தைப் பார்த்து விண்ணப்பம் செய்கிறார்.

காவேரி நதி சூழ்ந்த திருக்கோயிலிலே கண்வளர்ந்தருள்கிற திருவரங்கா!

- மேன்மையை விளைப்பதாக ப்ரமிக்கச்செய்யும் (தவறாக எண்ணச்செய்யும்) இவ்வுலக விஷயங்களை அடியோடு விட்டுவிட்டு.
- ஆத்மஸ்வரூபத்தை (உயிரின் தன்மையை) உள்ளபடி சரிவர அறிந்து, உணர்ந்து,
- அந்த அறிவினால் உண்டாகும் பயனாகிற பகவத் கைங்கர்யத்தைத் தெரிந்து கொண்டு,
- ஐந்து இந்திரியங்களையும் மனதிலே அடக்கி,
- மற்ற உபாயங்களில் தனக்கு தொடர்பு அற்றுப்போகும்படி தன் தலையில் ஏற்றியுள்ள மற்ற ஸாதனத்தொடர்பை அறுத்து,

- உன் திருவாசலில் காவல் புரிந்து (சரணடைந்து)
- வாழும், தங்கள் நதைத்தில் சோம்பியிருக்கும் பக்தர்களை
- உகப்பவனல்லவா நீ?

**விளக்கம்:**

1.) <u>மேம்பொருள் போகவிட்டு</u>

மேம்பொருள் என்பதற்கு மூன்று பொருள்கள்: 1. மேலெழுந்த பொருள், 2. மேவின பொருள் 3. மேம்பாட்டை விளைக்கும் பொருள்.

"தேகமும், தேகத்தைச் சார்ந்த ஐம்புலன்களும், அவைகளினால் கிடைக்கக் கூடியவையும் அற்பமானவை; மின்னலைப்போல் தோன்றி மறையக்கூடியவை; அழியக் கூடியவை; அவை மேலெழுந்தவாரியாகக் காணும் போது இன்பங்கள் போன்று தோன்றினாலும், பகவானைப்பற்றிய அறிவு கொஞ்சம், கொஞ்சமாக வர ஆரம்பித்ததுமே, அவைகளில் இன்பம் ஒன்றுமில்லை" எனும் தெளிவு பிறந்ததும், தேகம் என்பது மேலெழுந்த பொருளாகிறது. ஆக, தேகமும், அதைச்சார்ந்த ஐம்புலன்களும் சுகம் அளிக்கின்றன எனும் அறியாமையை வாசனையுடன், அடியோடு போகவிடுதல், நீக்குதல், வாழும் சோம்பரின் முதல் படி, ஞானம் அல்லது சாதனை என்றும் கூறலாம்.

தேகம் உள்ளேயிருக்கம் ஆத்மாவுடன் பொருந்தியிருப்பதால், தேகம் மேவின பொருளாகிறது.

தன் தேகத்தின் மீது தானே அபிமானம், ஆசை, பற்று வைத்துக்கிடப்பதால், தேகம் மேம்பாட்டை விளக்கும் பொருளாகிறது.

கர்மம் காரணமாக ஏற்பட்டது தேக-ஆத்மா பிணைப்பு, தேகத்தை அடியோடு விட்டு விடுங்கள் என்று ஆழ்வார் கூறவில்லை. ஆத்மாவைச் சரிவரப் பேணவேண்டும். ஆத்மாவை உள்ளடக்கிய தேகத்தையும் பேணவேண்டும். ஆனால், தேகமே ஆத்மா என்ற அறியாமையையும், தேகத்தைச்சார்ந்த ஐம்புலன்கள் அளிப்பதே இன்பம் எனும் அறியாமையையும், அறவே விலக்கவேண்டும் என்ற அறிவு வேண்டும் என்பதே நோக்கம்.

அதாவது, தன் தேகமே "நான்" என்ற நினைவும், தன்னுடையதல்லாத பொருள்களைத் தன்னுடையது எனும் நினைவும் "சம்சாரம்" என்கிற மரம் வளர உறுப்பான இரு பருப்புகளையுடைய விதை என்பதைத் தெரிந்து, 'மேம்பொருளை' அடியுடன் அகற்ற வேண்டும்'.

ஒன்றுடன் ஒன்று பிணங்கி நிற்கும் தேகமும், ஆத்மாவுமாகிற இரண்டு மரங்களில், தேகமாகிற ஒன்றைக்கழிக்க விரும்புபவன், அகங்காரம் (நான் என்கிற அகந்தை), மமகாரம் (என்னுடையது எனும் எண்ணம்), ஸ்வாதந்தர்ய புத்தி (எல்லாம் பகவான் செயல் என்பதை மறந்து, எல்லாம் என் புத்தியே எனும் நினைவு) ஆகியவற்றைக் கழித்து, பின் தேகத்தைக் கழித்து இறைவனை அடையலாம் என்பது கருத்து. மேம்பொருள் போகவிட்டால் மட்டும் போதுமா? போதாது. ஆகவே,

2.) <u>மெய்ம்மையை மிகவுணர்ந்து</u>

மெய் என்பது ஆத்மா. மாறுபாடு அடைந்துகொண்டே இருக்கும் தேகம் போன்ற அசேதனப் பொருளைப் 'பொய்' என்றும், சொரூப மாறுபாடு இல்லாத சேதனப் பொருளை 'சத்யம்'-'மெய்' என்றும் உபநிஷத் சொல்கிறது. அந்த மெய்யான தன்மையே மெய்ம்மை எனப்படும் ஆத்மா.

“தேகமே ஆத்மா” என்ற கொள்கையுடைய லோகாயதன் (Materialist) எனப்படும். சாருவாகனைப் போலுமல்லாமலும் “தேகத்தைக் காட்டிலும வேறுபட்டதாய், நித்யமாயிருக்கும் ஆத்மா, ஸ்வதந்தரமாயும் இருப்பது” என்ற கொள்கையுடைய பூர்வ மீமாம்ஸகனைப் போலுமல்லாமலும் “ஆத்மாவின் அறிவு வந்தேறி, கல்லைப்போல அறிவற்றவனாகையே” எனும் வைசேஷிகன் போலுமல்லாமல், “ஆத்மாவை உள்ளபடி உணர்ந்து, அதாவது, தானே ஒளிமயமாகப் பிரகாசிப்ப வனாய், நித்யனாய், நித்யமான அறிவை குணமாகவும் உடையவனாய், அணுபரிமாணமான ஸ்வரூபத்தை உடையவனாய், ஈஸ்வரனுக்கே உரியவனாய், அவன் அடியார்க்கும் ஆட்பட்டவனாய் இருப்பவன் ஆத்மா” என்று அறிந்துகொள்ளலே, ‘மெய்ம்மையை மிக உணர்ந்து’ என்பதாகும். இது இரண்டாவது படி. அப்படி உணர்ந்ததினால் பயன் என்ன?

3 ) <u>ஆம் பரிசு அறிந்து கொண்டு:</u>

தேகமும், தேகத்துடன் தொடர்புடையவைகளும் கைவிடத்தக்கவை என்பதை நன்கு உணர்ந்து, ஆத்மாவையும் உள்ளபடி அறிந்தால், அதற்குப்பிறகு கிடைக்கும் பயன் பகவானுக்கு கைங்கர்யம் செய்தலே என்பதை நன்கு அறிதல். இது மூன்றாவது படி.

அதாவது, அறிவின் பயன் என்பது பகவானுக்குத் தொண்டுசெய்வதே என்பதைத் தெரிந்து கொளல். சாமான்ய மனிதன் ஒருவனை - சம்சாரியை - எப்படி சம்சார பந்தத்திலிருந்து விடுவிப்பது? எப்படி அவன் எம்பெருமானைப் பற்றுவது? விடுகைக்குப் பின் அவனைப் பற்றுகையா? அல்லது அவனைப் பற்றுகைக்குப்பின் பந்தத்தை விடுகையா? இரண்டும் அல்ல என்கிறார் ‘நஞ்சீயர்’ எனும்

மகான். "விடுவித்துப்பற்றுவிக்கும் எம்பெருமானே உபாயம்" என்று அருளுகிறார். அதாவது, எல்லாமே அவன் இன்னருளே. கைங்கர்யமே புருஷார்த்தம் (பயன்) என்று அறிந்தால் போதுமா?

4. <u>ஐம்புலன் அகத்தடக்கி:</u>

இந்திரியங்களைத் தம்வசத்தில் கொணர்ந்து, பகவானுக்கு கைங்கர்யம் செய்யும்போது தனக்கு ஆனந்தமாக இருக்கிறது எனும் நினைவை அறுத்தல். இது நான்காவது படி.

அதாவது, பகவத் கைங்கர்யம் செய்ய வாய்ப்பு கிடைத்து, பகவானுக்குத் தொண்டு செய்யும்போது நமக்கு மகிழ்ச்சியாக உள்ளது எனும் சுயநல நினைவை அகற்றல். ஏனெனில், நாம் செய்யும் தொண்டு, பகவானுக்கு ஆனந்தத்தை, உகப்பை, விளைவிக்கவேண்டும் என்பது தவிர, நம் ஆனந்தத்துக்காக அல்ல, எல்லாம் பகவான் உகப்புக்காகவே என்பதை உணரவேண்டும். இதற்குக் "கைங்கர்யக்களையறுப்பு" என்று சொல்வர். ஆனால், நாம் செய்யும் தொண்டு பகவானுக்கு உகப்பை ஏற்படுத்தி, அதனால் நமக்குச் சிறிது ஆனந்தம் ஏற்பட்டால் தவறில்லை.

அதாவது, எம்பெருமானுக்குத் நம்மீது உள்ள இயற்கையான ப்ரீதியைத் துளிர் எழுப்பலே நோக்கம். "தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" (திருவாய்மொழி 2-9-4) "வழுவிலா அடிமை செய்ய வேண்டும்" (திருவாய்மொழி 3-3-1) என்று நம்மாழ்வாரும், "உனக்கே நாம் ஆட்செய்வோம் மற்று நம் காமங்கள் மாற்று" என்று ஸ்ரீ ஆண்டாளும் (திருப்பாவை) அருளிச்செய்ததை இங்கே கவனத்தில் கொளல் நல்லது. பின்னர் என்ன செய்ய வேண்டும்?

5. கார்மறத்தலை சிரைத்து

மற்ற உபாயங்களில் (வழிகளில்) தனக்குத் தொடர்பு அற்றுப் போகும்படியாக, அதாவது, தன் தலையில் ஏற்றிக் கொண்டிருக்கும் தனக்குப்பலனைப் பெறமுடியாதபடி பாரமாகவும், தடங்கலாகவும் கிடக்கும் மற்ற சாதனங்களுடன் உள்ள தொடர்பை அறுத்தல் வேண்டும். இது ஐந்தாவது படி.

அதாவது, "நானே எனக்கு ரட்சகன், நானே பலவித உபாயங்களைக் கடைப்பிடித்து வேண்டிய பயனைப் பெறுவேன்" என்ற அகங்கார நினைவை அடியோடு அகற்றல். "நான் கர்ம, ஞான, பக்தியோகங்கள் செய்கிறேன். நான் திருநாமஸங்கீர்த்தனம் செய்கிறேன். நான் முக்கால பூஜை செய்கிறேன். ஆகவே, எனக்குப் பலன் கிடைக்கும்" எனும் அகங்கார கர்ப்பங்களை வாசனையுடன் வீசி எறியவேண்டும். "என்னை நானே ரட்சித்துக் கொள்ளமுடியாது; பகவானே ரட்சகன்" எனும் நினைவு வேண்டும்.

அவ்வளவுதானா?

6. உன் கடைத்தலை இருந்து

அரங்கா! உன் திருவாசலிலே காவல் புரிந்து, 'தலைக்கடை' என்று த்வயத்தில் சரண ஸப்தத்தால் சொல்லப்பட்ட திருவடிகளைப் பற்றுகிறேன்.

அதாவது, திருவாசலில் காவல் புரிந்து என்பது சரணாகதியைக் குறிக்கும். இங்கே ஓர் ஐதீகம் (பழைய காலத்தில் நடந்த சம்பவம்) சொல்வர். நாதமுனிகளின் சிஷ்யரான திருக்கண்ணமங்கையாண்டான் ஒரு காட்சியைக் கண்டார். ஒருவன் தன்னுடைய நாயைத் துன்புறுத்திய மற்றொருவனைக் கொலை செய்து, பின் தன்னைத்தானே குத்திக்கொண்டு மாண்டுபோனான். "தானிட்ட சோற்றை

உண்டு, தன் வாசலையே பற்றிக்கிடக்கும் ஒரு சாதாரண நாய் விஷயத்தில், தேகமே ஆத்மா என்று தவறாக நினைக்கும் ஒரு சம்சாரிக்கே இந்த அளவு பாசமிருந்தால், எம்பெருமான் தன் தலைவாசல் பற்றிக்கிடப்பவர்களை ஒரு நாளும் எமன் முதலானோர் கையில் காட்டிக் கொடுக்கமாட்டார்" என்று அவர் உறுதியாகத் தீர்மானித்து, எல்லா உலக விஷயங்களையும் அப்படியே விட்டு விட்டு, திருக்கண்ண மங்கையில் எழுந்தருளியுள்ள எம்பெரு மானுக்கே தன் ஆயுள் முழுதும் கைங்கர்யம் செய்து கொண்டு, அவன் கோவிலின் தலைவாசலிலேயே கிடந்தார்.

எம்பெருமானையே முழுவதும் நம்பி, ஞானம், பக்தி, வைராக்யத்துடன் வாழ்நாள் முழுதும் அவனுக்கே தொடர் கைங்கர்யம் செய்து, அவன் கோவில் வாசலில் 'சரண்' என்று கிடந்தால், அவன் நம்மை கைவிடுவனோ? இதுவே ஆறாவது படி.

7. <u>வாழும் சோம்பர்: மேற்கண்ட ஆறு வகை ஞானத்துடன் வாழ்பவர்</u>

தங்கள் நலத்தைச் சிறிதும் நினையாமல், தமக்காக வாழ்வதில் அக்கறையின்றி, தங்கள் வாழ்ச்சி என்பதில் சோம்பேறிகளாய், எப்போதும் எம்பெருமானுக்கே தொண்டு செய்பவரே வாழும் சோம்பர். "எல்லாம் அவன் பார்த்துப்பான்" என்ற உறுதியான நம்பிக்கையுடன், தெய்வ சிந்தனை அகலாமல் கிடப்பவர்கள் அவர்கள். ஆனால், எம்பெருமானை நினையாமல், சதா சர்வகாலமும் தமக்காகவே வாழ்கிறவர்கள். "கெடும் சோம்பர்". ஆக, ஆத்திகர்களில் தலைசிறந்தவரான வாழும் சோம்பர், எந்தப் ப்ரதிபலனையும் எதிர்பாராமல், எம்பெருமானையே உபாயமாகப் பற்றி, அவனை

அனுபவிப்பதையே பொழுது போக்காகவும், தம்மைத்தாமே காத்துக்கொள்வதில் சிறிதும் மனம் வைக்காமலும் இருப்பவர்கள்.

8. வாழும் சோம்பரை உகத்திபோலும்

தங்களைப்பற்றிச் சிறிதும் நினையாமல், தங்களைக் காக்கும் பொறுப்பை எம்பெருமானிடமே விட்டுக்கிடக்கும் வாழும் சோம்பரைக் கண்டால், அரங்கா!

மேம்பொருள்போகவிட்டு மெய்ம்மையைமிகவுணர்ந்து*
ஆம்பரிசறிந்துகொண்டு ஐம்புலனகத்தடக்கி*
காம்பறத்தலைசிரைத்து உன்கடைத்தலையிருந்துவாழும்*
சோம்பரைக் கண்டால்,

அரங்கா! உன்னுடைய திருவுள்ளம் இப்படி உகப்பை (பெருமகிழ்ச்சியை) அடைகின்றதே! ஸ்ரீவைகுண்டத்தில் நித்யசூரிகளை உகப்பதுபோல, இங்கே, 'வாழும் சோம்பரை'யும் உகக்கின்றாய் போலும்! என்னே உன் பெருமை! என்னே உன் உயர்வு! சூழ்புனல் அரங்கத்தானே!

ஆழ்வாரைப்போன்ற வாழும் சோம்பரைப் பெறுவோமோ? எனும் ஆசையாலே திருவரங்கத்திலே பெரியபெருமாள் சோம்பாதே கண்வளர்ந்தருளுகிறார் என்பதே கருத்து.

ஆக, இப்பாசுரம், ஒரு நல்ல ஸ்ரீவைஷ்ணவன் எப்படி வாழவேண்டும் என்பதற்கு அரியதோர் இலக்கணம் வகுத்துக் கொடுத்து, அருளிச்செய்த ஆழ்வாரின் மேன்மையையும் நன்கு விளக்கும் அற்புதமான பாசுரம்!

**அடிமையில்குடிமையில்லா அயல்சதுப்பேதிமாரில்***
**குடிமையில்கடைமைபட்ட குக்கரில்பிறப்பரேலும்***
**முடியினில்துளபம்வைத்தாய் மொய்கழற்கன்புசெய்யும்***
**அடியரையுகத்திபோலும் அரங்கமாநகருளானே. (39)**

## திருவடிகளுக்கு அன்பு செய்யும் அடியவரை உகக்கிறாய்

திருவரங்கா!

திருமுடியில் திருத்துழாய் மாலை அணிந்தவனே! உனக்குக் கைங்கர்யம் செய்வதில் ஊற்றம் இல்லாமல், நான்கு வேதங்களையும் ஓதும் வேதியரைக்காட்டிலும், பிறப்பில் கீழான சண்டாளர்களைக் காட்டிலும் கீழான ஜாதியில் பிறந்தவரேயானாலும், உன் திருவடிகளுக்கு அன்புடன் தொண்டுசெய்யும் அடியார்களையே உகப்பவனல்லவா நீ?

எவ்வளவு தாழ்ந்த ஜாதியில் பிறந்தவர் ஆயினும், முன் ''மேம்பொருள்'' பாசுரத்தில் சொன்ன ஞானத்திலே ஊன்றியிருப் பவர்களாகில், அவர்கள் திருத்துழாயைப் போல உன் தலைமேல் வைக்கப்பட்டுக் கொண்டாடப்படுவரன்றோ?

**திருமறுமார்வநின்னைச் சிந்தையுள்திகழவைத்து***
**மருவியமனத்தராகில் மாநிலத்துயிர்களெல்லாம்***
**வெருவுறக்கொன்றுசுட்டிட்டு ஈட்டியவினையரேலும்***
**அருவினைப்பயனதுய்யார் அரங்கமாநகருளானே. (40)**

## வாழும் சோம்பர் பாபம் செய்யார்:

திருவரங்கா!

பெரியபிராட்டியாரையும், ஸ்ரீவத்சமென்னும் மறுவையும் திருமார்பில் தரித்துள்ளவனே! பிறப்பால் வந்த தாழ்வு இவன் விருப்பத்தால் வந்ததல்லவே! ஆகவே, மன்னிக்கத்தகாத ஒழுக்கக்குறைவு உள்ளவர்களும், ''மேம்பொருள்'' பாசுரத்தில்

சொல்லப்பட்ட அறிவுடையவர்களாகில், அந்த ஒழுக்கக்குறைவினால் ஏற்படும் பலனை அனுபவிக்கவேண்டியதில்லையே!

திருவரங்கா! உன்னையே உபாயமாகவும், அடையத்தக்க உபேயமாகவும் கொண்டவன், மற்ற பயன்களைவிட்டு, நீயே மேலான பயன் என்று உணர்ந்தால், அவன் செய்த பாபத்தின் வினைகளை அடையமாட்டான்.

திருவரங்கா! இராம, கிருஷ்ண அவதாரங்களுக்குப் பல ஆண்டுகளுக்குப்பின் பிறந்தவர் வணங்கத்தானே திருவரங்கத்தில் சயனித்திருக்கிறாய்! பாபம் செய்தவர்களையும் ரட்சிக்கவேண்டும் என்று நீ ஆசைப்படலாமேயொழிய, ''மேம்பொருள்'' பாசுரத்தில் சொன்ன ஞானத்தை அடைந்த அதிகாரிகள் பாபங்கள் செய்யமாட்டார்கள். எம்பெருமானாகிய உன் அன்புக்குப் பாத்திரமானவர்கள் ஒரு நாளும் பாவங்கள் செய்யமாட்டார்களே!

**வானுளாரறியலாகா வானவாவென்பராகில்***
**தேனுலாந்துளபமைாலைச் சென்னியாவென்பராகில்***
**ஊனமாயினகள்செய்யும் ஊனகாரர்களேலும்***
**போனகம்செய்தசேடம் தருவரேல்புனிதமன்றே. (41)**

## ''போனகம் செய்தசேடம்'' புனிதமானது

''மேம்பொருள்'' பாசுரத்தில் சொல்லப்பட்ட ஞானம் அடைந்தவர்கட்கு, பிறப்பாலோ, ஒழுக்கத்தாலோ வரும் குறை ஏதுமில்லையன்றோ? அதுமட்டுமா? அந்த ஞானம் உடையவர்களுடன் தொடர்புடையவரும் பரிசுத்தம் அடைவார்களே!

ஞானம் பெற்றவர் அமுதுசெய்து கழித்த இலையில் இருக்கும் பிரசாதம் உண்டவர்கள் தூய்மையடைவார்களே!

பழுதிலாவொழுகலாற்றுப் பலசதுப்பேதிமார்கள்*
இழிகுலத்தவர்களேலும் எம்மடியார்களாகில்*
தொழுமினீர்கொடுமின்கொண்மின் என்றுநின்னோடுமொக்க*
வழிபடவருளினாய்போல் மதிள்திருவரங்கத்தானே. (42)

"கொடுமின்! கொண்மின்"

திருவரங்கா!

(1) பிறப்பு, ஒழுக்கம் முதலானவற்றால் தாழ்வுடையவரானாலும், "மேம்பொருள்" பாசுரத்தில் சொல்லப்பட்ட ஞானம் பெற்றவர்கள்

(2) பிறப்பு, ஒழுக்கம் முதலியவற்றால் உயர்ந்தவராயினும் ஞானம், அனுஷ்டானம் குறைந்தவர்.

இந்த இருபிரிவினரில், முன்னவர் பின்னவரால் பூஜிக்கப்பட வேண்டியவர்களே! அவர்களுக்கு ஞானம் அளிப்பது, அவர்களிடம் ஞானம் கொள்வது முதலிய கொள்வினை, கொடுப்பினைகளைச் செய்யத்தக்கவர்களே!

எவ்வளவு தாழ்ந்தகுலத்தவராயினும் அவர் எம்பெருமானுடன் உள்ள உறவை நன்றாக அறிந்து, அதற்குத்தக்க நடப்பவராயின், "எம் அடியார்" என்று எம்பெருமானால் அபிமானிக்கப் படுவராதலால், அவர்களை, வேத அத்யயனம் செய்பவராயினும் தொழவேண்டும். ஏனெனில், தன்னடக்கம் (நைச்சியம்) அந்த அடியார்களுக்குப் பிறந்தது முதல் இயற்கையாய் இருப்பது. ஆனால், வேதம் அத்யயனம் செய்பவர் தங்கள் உயர்ந்த சாதி காரணமாக துர் அபிமானம் கொண்டு நைச்சியமாக இருப்பது அரிது. ஆகவே, பரம பாகவதரான முன்னவரைத் தொழுதால் துரபிமானம் போய்விடுமன்றோ?

அமரவோரங்கமாறும் வேதமோர்நான்குமோதி*
தமர்களில்தலைவராய சாதியந்தணர்களேலும்*
நுமர்களைப்பழிப்பராகில் நொடிப்பதோரளவிலாங்கே*
அவர்கள்தாம்புலையர்போலும் அரங்கமாநகருளானே. (43)

**தொண்டரைப் பழிக்காதே!**

திருவரங்கா!

பிறப்பு, ஒழுக்கம் முதலானவற்றால் வந்த பெருமைகளுக்கும் மேலே ஞானப்பெருமையும் உடைய அந்தணர்கள், பிறப்பாலும், ஒழுக்கத்தாலும் வந்த பெருமை இல்லாமல், ஞானப்பெருமையை மட்டும் உடைய பாகவதர்களை, பகவத் ப்ரபாவத்தால் (அருளால்) அவர்களுக்கு உண்டான பெருமையை உணராமல், அவர்களைத் தாழ்வாக நினைத்தால், அந்த வினாடியே அவர்கள் சண்டாளராவர். பரம பாகவதர்களான இவர்களுக்குப் பண்ணும் அபசாரம், பகவானுக்குப் பண்ணும் அபசாரங்களை விட மிகவும் கொடியதன்றோ?

''அர்ச்சாவதாரத்தில் விக்கிரகத்தின் திரவியத்தைப் பற்றி சிந்திப்பதும், வைணவர்களின் பிறப்பைப்பற்றி சிந்திப்பதும், பெற்ற தாயின் யோனியை ஆராய்வதற்கு ஒக்கும் அல்லவா?''

மேம்பொருள் பாசுரத்தில் சொல்லப்பட்ட ஞானம் உடையவரைத் தாழ்வானவர் என்று, அவர்கள் பிறப்பு, ஒழுக்கம் கருதி நினைத்தால், அந்த அந்தணர் மார்பு பூணூலும் வாராய் மாறிவிடும் அல்லவா? (ஆகவே ஞான, அனுட்டானம் உடைய வைணவர்களிடையே, பிறப்பு கொண்டு பேதம் காணலாகாது).

**பெண்ணுலாம் சடையினானும் பிரமனுமுன்னைக் காண்பான்***
**எண்ணிலாவூழியூழி தவஞ்செய்தார்வெள்கிநிற்ப***
**விண்ணுளார்வியப்பவந்து ஆனைக்கன்றருளையீந்த***
**கண்ணறா* உன்னையென்னோ? களைகணாக்கருதுமாறே (44)**

## <u>நீயே உபாயம்! நீயே உபேயம்!!</u>
## <u>உன்னையே சரண் அடைந்தேன்</u>

திருவரங்கா!

பிரமன் முதலிய தேவர்களுக்கும் கிடைக்கமுடியாத அரிய பேற்றை, பெருமையை, கஜேந்திரன் என்ற விலங்கினத்தைச் சேர்ந்த யானைக்கு நீ அருளவில்லையா? உன்னை நன்கு அறிந்து, உனக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள சம்மந்தத்தையும் நன்கு புரிந்துகொண்டு, ''நான் உன் அடிமை; நீயே ரட்சகன்; என்னால் என்னை ரட்சிக்க முடியாது; உன்னையே சரணடைந்தேன்'' என்று தன்னையும், உன்னையும், நம் சம்மந்தத்தையும் உணர்ந்து, ஞானத்துக்கேற்ப வாழ்ந்துகாட்டும் பரம பாகவதர்களுக்கு அருள் புரிபவனல்லவா நீ? அன்று ஒரு முதலையின் வாயில் அகப்பட்ட யானைக்கு அருள் புரிந்தாய்; இன்று, ஐந்து புலன்களாகிய ஐந்து விலங்குகளிடம் அகப்பட்டுக்கிடந்த எனக்கு அருள் புரிவாய்!

தம்மைக் காத்துக்கொள்வதில் தாமே முயல்வதைவிட்டு, தங்கள் வெறுமையை முன்னிட்டு, உன்னையே உபாயமாகப் பற்றினால், நீ அவர்கள் காலிலேயே வீழ்ந்துவிடுவாய் என்பதை இந்த உலகம் அறியவில்லையே! உன்னை இழந்துவிட்டதே! உன்னையே ''சரண்'' என்று கிடப்பவர்களுக்கு அருள் மாரி பொழிந்து அவர்களை ரட்சிக்கிறாய் என்று தெரியாத அறிவிலிகளாக உள்ளனரே!

வளவெழுந்தவளமாட மதுரைமாநகரந்தன்னுள்*
கவளமால்யானைகொன்ற கண்ணனையரங்கமாலை*
துளவத்தொண்டாயத்தொல்சீர்த் தொண்டரடிப்பொடிசொல்*
இளையபுன்கவிதையேலும் எம்பிராற்கினியவாறே. (45)

<u>அடியேன் கவிதை உனக்குப் ப்ரீதி என்னே!</u>

அன்று 'குவலயாபீடம்' என்னும் யானையைக் (அரக்கனை) கொன்று மக்களைக் காத்தருளிய கண்ணனே இன்று திரு அரங்கனாய் திருப்பள்ளி கொண்டுள்ளான். அது போன்று, அடியேன் பாபங்களை அழித்து திருவரங்கன் அடியேனை ஆட்கொண்டானே! ஸ்ரீரங்கநாதப் பெருமானுக்குத் திருத்துழாய் தொண்டிலே ஈடுபட்டுள்ள தொண்டரடிப்பொடி எனும் அடியேன், இயற்கையிலேயே பாகவத சேஷத்திலே ஈடுபட்டுள்ள அடியேன் சொன்ன (அருளிய) 'திருமாலை' என்னும் இந்தப்பிரபந்தம், சப்தம், கவித்வம் முதவியவற்றால் குற்றங்கள் உடையதாயிருந்தாலும்,

எம் ஸ்வாமி பெரியபெருமாளுக்கு, திருவரங்கப் பெருமானுக்கு,
ப்ரீதியை விளைவித்தது என்னே!
திருவரங்கா! திருவரங்கா! உன் உகப்பே என் உகப்பு!

